

ஸ்ரீ:

ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

# ஸ்ரீ பெரியாழ்வார் பேரருள்

[ஸ்ரீ பெரியாழ்வார் அவதார விசேஷம், ஸ்ரீ பெரியாழ்வாரின் கண்ணன் காதணி விழா (பன்னிருநாம அந்தாதி) பாசுரங்கள் மூலம் நம் மக்கட்செல்வங்களுக்கு ஸகல க்ஷேமம், ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகனின் பன்னிருநாமம், ஸ்ரீ லக்ஷ்மீஹயக்ரீவ அஷ்டோத்தரமும், அஷ்டோத்தர சதநாமாவளியும், பாகவதாளின் பாததூளியின் பெருமை முதலிய விசேஷ அம்சங்களும் அடங்கியது.]

இச்சிறு நூல் குரோதி ஹு புரட்டாசிமீ 29உ (15-10-1964) புரட்டாசித் திருவோணத் திருநாளன்று திருவஹீந்திரபுரம் ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் ஸந்நிதியில் பன்னிருநாம ஸேவையின் போது திருமண் ஸ்ரீசூர்ணத்துடன் கோஷ்டிக்கு விநியோகிக்கப்பட்டது

**பூச்சூட்டல், சீமந்தம், ஆண்டு நிறைவு, கர்ண பூஷண விழா, மற்றும் எல்லாச் சுபச்சடங்குகளிலும் பரிசளிப்பதற்குரிய நூல்**




பதிப்பகத்தார்:

**தி லிட்டில் ப்ளவர் கம்பெனி,**

தியாகராயநகர், சென்னை-17.

——— சென்னையில் லிப்கோ ஏஜெண்டுகள்: ———

**எம். தாமோதரம் & கம்பெனி,**

அப்பா பில்டிங்ஸ், 9/286, எஸ்பிளனேட், சென்னை-1.

அக்டோபர் **1964**] [விலை 60 ந.பை.

முதற்பதிப்பு : 1964.

# பதிப்பாசிரியரின் பணிவுரை

புரட்டாசித் திருவோணத் திருநாளான இந் நன்னாளில் இந்த திவ்ய தேசத்தில் குழுமியிருக்கும் ஸ்ரீ தேசிக பக்தர்களான பாகவ தோத்தமர்களுக்கு ஸ்ரீ பெரியாழ்வாருடைய பேரருள் ஏற்படவேண்டும் என்பது நம் லோகாசாரியன் திருவடிகளில் அடியோங்கள் செய்யும் ப்ரார்த்தனை. அந்த ப்ரார்த்தனையுடன் ஸ்ரீ பெரியாழ்வார் பேரருள் என்ற இச்சிறு நூலை வெளியிட்டிருக்கிறோம்.

இந்நூலைப் பதிப்பிப்பதில் ஒப்பிலியப்பன் ஸந்நிதி ஸ்ரீ உ. வே. வித்யா விசாரத், சிரோமணி வித்வான் வங்கீபுரம் நவநீதம் ஸ்ரீராம தேசிகாசார்ய ஸ்வாமியால் பரிசோதிக்கப்பட்டு வெளியிடப்பட்ட ஸ்ரீ தேசிகப் பிரபந்தம் (3 ஆம் பதிப்பு) பேருதவியாய் இருந்தது. இதற்காக இந்த ஸ்வாமி எழுந்தருளியிருக்கும் திக்கு நோக்கித் தண்டன் ஸமர்ப்பித்து அடியோங்களுடைய க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக் கொள்கிறோம். மேற்படி நூலின் ப்ரசுரகர்த்தா ஸ்ரீ உ. வே. R. ரங்க ஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமிக்கும் (அட்வகேட், தஞ்சாவூர்) அடியோங்களுடைய க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

ஆஸ்திக முயற்சிகளில் வெற்றி பெறவேண்டும் என்று பரம க்ருபையுடன் அடியோங்களை அனுக்ரஹித்து, ஊக்கமும் தைர்யமும் அளித்துவரும் வேதரத்ந வேதசூடாமணி ராமாயணஜ்யோதி ஸகலகலாவாசஸ்பதி ஸலக்ஷணகனபாடி (தஞ்சாவூர் கமலாபுரம்) ஸ்ரீ உ. வே. K. V. ஸந்தான கோபாலாச்சார்ய ஸ்வாமிக்கு அடியோங்களுடைய க்ருதஜ்ஞதா விச்வாஸத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

கடந்த சுமார் முப்பது ஆண்டுகளாகப் பேரன்புடன் அடியோங்களுக்கு உதவிகள் பல புரிந்து வருபவரும், திருமால் செந்நெறியில் செழித்திடும் செம்மலாய்த் தந்நலம் கருதாத் தகைமையாளராய்த் தளும்பலில்லா நிறைகுடம் போன்ற அறிவார்ந்த அடக்கமுடையவராய் விளங்குபவருமான மகாவித்துவான் சிந்தாமணிச் செல்வர் ஸ்ரீமான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்களுக்கு மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக்கொண்டு அவர் அரோக திடகாத்திரத்துடன் பல்லாண்டு பல்லாண்டாக வாழ அருள் புரியுமாறு மல்லாண்ட திண்டோள் மணி வண்ணன் தாள் பணிகின்றோம்.

மஹத்தான பல பகவத் கைங்கரியங்களை மிக்க ஆர்வத்துடனும் பக்தி பூர்வகமாகவும் செய்து வருபவரும் ஆஸ்திகர்களுக்குத் திலகம் போல விளங்குபவருமான ஸ்ரீ உ. வே. மாடபூசி ஸுதர்சனம் அய்யங்

கார் ஸ்வாமி (Timber Merchant and Contractor, Madras) ஆஸ்திக ஸம்பந்தமான அடியோங்களுடைய எல்லா முயற்சிகளுக்கும் ஊக்கமும் உற்சாகமும் அளித்து பரமப்ரீதியுடன் ஆதரித்து வருகிறார். அந்த ஸ்வாமிக்கும், தந்தையின் அடிச்சுவட்டையே பின்பற்றி ஆஸ்திக விஷயங்களில் முழுமனத்துடன் ஈடுபட்டுவரும் அவர்தம் திருக்குமாரரான ஸ்ரீ உ. வே. M. S. ஸந்தானம் அய்யங்கார் ஸ்வாமிக்கும் அடியோங்கள் பெரிதும் க்ருதஜ்ஞதை பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். இக்குடும்பத்தினர் ஸகல ஸௌபாக்யங்களுடன் பல்லாண்டு பல்லாண்டாக வாழ்ந்து, ஆஸ்திகம் தழைத்தோங்க இன்னும் பற்பல பகவத் கைங்கர்யங்களைத் தொடர்ந்து செய்து வருவதற்கு க்ருபை புரியும்படி நம் லோகாசாரியன் திருவடிகளில் ப்ரார்த்திக்கிறோம்.

மதுராந்தகம், மஹாவித்துவான் ஸ்ரீ உ. வே. டி. ஈ. வீரராகவாச்சாரியார் ஸ்வாமியின் விஷயதானமாக மாமணிக்கோயில் (விண்ணாற்றங்கரை) மகா ஸம்ப்ரோக்ஷண மாமணி மலரில் வெளியான, ஸ்ரீ தேசிகன் திருமஞ்சனக் கட்டியத்தையும் இப்புத்தகத்தில் சேர்த்துள்ளோம். இதற்காக அந்த ஸ்வாமிக்கும், தஞ்சை மாமணிக் கோயில் திருப்பணிக் கமிட்டியாருக்கும் அடியோங்களுடைய ஹ்ருதய பூர்வமான க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

இந்நூலைப் பதிப்பிப்பதில் மிகவும் உதவிகரமாக இருந்த மற்றொரு நூல் மயிலை ஸ்ரீ மாதவதாஸன் பதிப்பான நாலாயிர திவ்யப் பிரபந்தமாகும். இதற்காக இந்நூலின் ப்ரசுரகர்த்தர்களான ஸ்ரீ மணலி லக்ஷ்மண முதலியார் ஸ்பெசிபிக் எண்டோமெண்ட்ஸ் நிர்வாஹஸ்தர்களுக்குப் பெரிதும் க்ருதஜ்ஞதை பாராட்டுகிறோம்.

அடியோங்களுடைய இம்மாதிரி கைங்கர்யங்களில் யாதொரு ப்ரதிப்ரயோஜனமும் கருதாமல் உதவி புரிந்து வரும் பண்டிதராஜ, ஜ்யோதிஷரத்நம், ஸ்ரீ ஸுதர்சநோபாஸக ஸ்ரீரங்கம் ஸ்ரீ உ. வே. S. M. ஸுந்தர ராஜாசார்யஸ்வாமி, உபந்யாஸ கல்பதரு திருப்பாவை ரஹஸ்யார்த்த விமர்சன ஜ்யோதி வித்வான் ஸ்ரீ உ. வே. திருவயிந்திரபுரம் E. D. ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி, ஆக்கூர் ஸ்ரீ உ. வே. சேட்லூர் வரதாச்சாரியார் ஸ்வாமி, ந்யாயசிரோமணி, ஹந்திப்பிரவீண் ப்ரசாரகக் ஸ்ரீ உ. வே. கூத்தப்பாக்கம் திருமலை நல்லான் சக்ரவர்த்தி லக்ஷ்மீ நரஸிம்மச்சாரியார் ஸ்வாமி, மாம்பாக்கம் வங்கீபுரம் ஸ்ரீ உ. வே. ரங்கஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி, சித்திரக்கலைஞர் ஸ்ரீமான் கோபுலு அவர்கள், நுங்கம்பாக்கம் ஸ்ரீ உ. வே. C. P. S. ராகவாச்சாரியார் ஸ்வாமி, திருவயிந்திரபுரம் ஸ்ரீ உ. வே. அம்மங்கி D. ஆராவமுதாச்சார் ஸ்வாமி, வித்துவான் ஸ்ரீ M. P. ரங்கசாமிபிள்ளை ஆகியோருக்கும் பெரிதும் க்ருதஜ்ஞதை பாராட்டுகிறோம்.

மேலும் ஸ்ரீ லக்ஷ்மீஹயக்ரீவன் விஷயமாக 'ஹிந்து' பத்திரிகையில் வெளியான ஸ்ரீ உ. வே. V. M. வீரராகவாச்சார் ஸ்வாமியின்

ஸ்ரீ பெரியாழ்வார் பேரருள்

ஆங்கிலக் கட்டுரையைச் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்ததற்காக அந்த ஸ்வாமிக்கும் 'ஹிந்து' பத்திரிகைக் கார்யாலயத்தினருக்கும், பவன்ஸ் ஜர்னல், 30-8-1964 தேதியிட்ட இதழில் ஸ்ரீமத் வேதமார்க் கேத்யாதி ஸ்ரீமத் பரகாலமடம் ஜீயர் ஸ்வாமி விஷயமாக வெளியான ஆங்கிலக் கட்டுரையைச் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்து, அந்த ஸ்வாமியின் ப்ளாக்கையும் தந்துதவிய பம்பாய் பாரதீய வித்யாபவன் நிர்வாஹஸ்தர்களுக்கும் எங்களுடன் ஒத்துழைத்து இப்புத்தகத்தை அச்சிட்டு பூர்த்தி செய்துகொடுத்த சென்னை பெரம்பூர் அருணா பிரிண்டர்ஸ் உரிமையாளருக்கும் அடியோங்களுடைய க்ருதஜ்ஞதை உரித்தாகும்.

"ஸ்ரீரங்கம்",
8, ரங்கநாதன் தெரு,
தியாகராயநகர், சென்னை-17,
(முகாம்) திருவஹீந்திரபுரம்,
குரோதி ஸூ புரட்டாசி மீ
29உ குருவாஸரம்
(15—10—1964)

இங்ஙனம்,
கீழாத்தூர் ஸ்ரீநிவாஸாச்சாரியர்,
ந்யாய சிரோமணி
ஹிந்தி விசாரத்,
கௌரவப் பதிப்பாசிரியர்,
தி லிட்டில் ப்ளவர் கம்பெனி.

முழுதும் வெண்ணெ யளைந்துதொட் டுண்ணும்
முகிழி ளஞ்சிறுத் தாமரைக் கையும்,
எழில்கொள் தாம்புகொண் டடிப்பதற் கெள்கும்
நிலையும் வெண்தயிர் தோய்ந்தசெவ் வாயும்,
அழுகை யுமஞ்சி நோக்குமந் நோக்கும்
அணிகொள் செஞ்சிறு வாய்நெளிப் பதுவும்,
தொழுகை யுமிவை கண்ட அசோதை
தொல்லை யின்பத் திறுதிகண் டாளே.

— பெருமாள் திருமொழி 7-8.

குலசேகரப் பெருமாள் திருவடிகளே சரணம்

# ஸ்ரீ பெரியாழ்வார்

## அவதார விசேஷம்

பேரணிந்த வில்லிபுத்தூ ரானி தன்னில்
பெருஞ்சோதி தனிற்றேன்றும் பெருமா னே! முன் -
சீரணிந்த பாண்டியன்றன் நெஞ்சு தன்னில்
தியக்கறமால் பரத்துவத்தைத் திறமாச் செப்பி
வாரணமேல் மதுரைவலம் வரவே வானில் -
மால்கருட வாகனனுய்த் தோன்ற வாழ்த்தும்
ஏரணிபல் லாண்டுமுதற் பாட்டு நானூற் -
றெழுபத்தொன் றிரண்டுமெனக் குதவு நீயே.

— ப்ரபந்த ஸாரம்.

பாண்டிநாடு முத்தும் முத்தமிழும் பெற்றதனுல் பொலிவுற்று விளங்கும் நாடாய் உளது. அப்பாண்டி நாட்டில் புத்தூர் என்னும் ஊரை அடுத்த காட்டில் வாழும் வேடர் குலத் தலைவனுக்கும், அவன் மனைவியாகிய மல்லிக்கும், வில்லி, கண்டன் என்னும் இரு புதல்வர்கள் பிறந்து, வேட்டையாடுவதில் வல்லவர்களாய் இருந் தார்கள்.

ஒரு நாள் வில்லியும் கண்டனும் வேட்டையாடப் புறப்பட்டுச் சென்றனர். கண்டன் புலியைப் பின் தொடர்ந்து சென்று அம்புகள் எய்யும் பொழுது, அம்பிற்குத் தப்பிய புலி கண்டனைக் கொல்லவும், பின்னுல் வந்த வில்லி இக்காட்சியைக் கண்டு வருந்தினுன்; மனம் உருகித் திருமாலை நினைந்து கதறினுன். அவ்வளவில் திருமகள் நாதனின் அருளால் வில்லியின் தம்பி கண்டன் உயிர் பெற்றெழுந்த தோடு மிகுந்த செல்வமும் கிடைக்கவே, வில்லி அந்த இடத்தில் திரு மாலுக்கு உயர்ந்த ஒரு கோயிலை எழுப்பினுன்; அக்கோயிலைச் சூழப் பல அழகிய தெருக்களை அமைப்பித்து, அத்தெருக்களில் எழிலார் மாடங்களை உடைய வீடுகளையும் கட்டுவித்தான்; பின்பு புத்தூரில் உள்ளோரை அவ்வூரில் குடியேறச் செய்து, குடியேறியவர்களது ஊராகிய புத்தூர் என்பதனேடு தன் பெயராகிய வில்லி என்பதையும் சேர்த்து, 'வில்லிபுத்தூர்' என்று அத்திருப்பதிக்குப் பெயரிட்டுக் கோயிலின்கண் சிறப்பாகப் பூசை செய்தற்குரிய வழிகளையும் செய்து முடித்தான். அப்பதியைச் சூழ்ந்த இடத்திற்கு 'மல்லி நாடு' என்ற பெயரைத் தனது தாயின் நினைவாக வில்லி சூட்ட, அப்பெயரே அந்நாட்டிற்கு வழங்கப்படுவதாயிற்று.

வில்லிபுத்தூரில் குடியேறிய மறையவர்களுள் முகுந்த பட்டர் என்னும் முன்குடுமிச் சோழிய பிராமணர் இருந்தார். அவர் பதும வல்லி என்னும் மங்கை நல்லாளை மணந்து, இல்லறம் என்னும் நல்லறத்தை இனிது நடத்தி வருங்காலத்தே திருமகள் நாதனின் அருளால் அவருக்கு ஓர் ஆண் மகவு பிறந்தது. அந்த ஆண் மகவே பிற்காலத்தில் போற்றிப் புகழப்படும் பெரியாழ்வார் ஆவார்.

பெரியாழ்வார் ஸ்ரீ வில்லிபுத்தூரில், கலியுகத்தில் ஸ்ரீ பராங்குசர் அவதாராதி 47-வதான குரோதன ஆண்டு, ஆனித்திங்கள், வளர் பிறையில் பொருந்திய ஏகாதசி திதியில், ஞாயிற்றுக்கிழமை அன்று, சுவாதி நட்சத்திரத்தில், ஸ்ரீ கருடாமிசராய் அவதரித்தருளினர்.

பெற்றோர் அவருக்கு விட்டுசித்தன் என்ற பெயரை வைத்துத் தக்க வயதில் கல்வி கற்பிக்கத் தொடங்கினர். பின்னர் அவருக்குத் திருமாலுக்குத் தொண்டு செய்வதே சிறந்தது எனத் தோன்றியது.. எனவே, மூதாதையர் ஈட்டி வைத்துள்ள பொருட்குவியலினின்று ஒரு பெரும்பகுதியைக் கொண்டு நீர்ப்பாங்கான நிலத்தினைத் தேர்ந் தெடுத்து, வேலி வளைத்து, அதில் பல வகை மலர்ச்செடிகளையும் பயிரிட்டு, அம்மலர்களால் அழகிய மாலைகளைக் கட்டி, அப்பதியில் உள்ள வடபெருங்கோயிலின்கண் எழுந்தருளியிருக்கும் திருமாலுக் குச் சார்த்தி வருவாராயினர்.

அப்போது பாண்டி நாட்டில் வல்லப தேவன் என்னும் அரசன் செங்கோலோச்சி வந்தான். அவன் பாண்டியர்தம் குலத்திற்கு எழில் மிக்க விளக்குப்போன்றவன் ; பல கலைகளைத் தேர்ந்தவன். அவன் மறக்கள வேள்வியில் மாட்சிமையுற்றமை போல அறக்கள வேள்வியிலும் மாட்சிமை அடைய வழி யாது எனச் சிந்தித்து, உண்மைப் பொருளை உணர்தலே அதற்கு வழி என முடிவு செய்தான். அவ்வமயம் வேத வேதாந்தங்களைக் கற்ற செல்வநம்பி என்னும் புரோகிதர் அரசனிடம் வர, அவரை நோக்கி அரசன், 'அந்தமில் இன்பத்தை எவ்வாறு பெறலாம் ?' எனக்கேட்டான். மறையவராகிய செல்வநம்பி, 'தேவ முடிவாகிய பரம்பொருள் இன்னது என்பதை வித்துவான்கள் மூலம் நிச்சயித்து, அவ்வழியாற்பெறலாம்,' என்று அறிவிக்க, அரசனும், 'அங்ஙனமே ஆகுக' என்றான். பின்னர் அரசன் தனது அரியணைக்கு முன் இடத்தில் ஒரு தோரணக் கம்பத்தை நட்டு, கிழிச்சீரையிலே பெரும்பொற்குவியலை இட்டு, அப்பொற் கிழியை அக்கம்பத்தில் கட்டித் தொங்கவிட்டு, 'யார் கூறும் உண்மைப் பொருள் நிச்சயத்தாலே இப்பொற்கிழி தானே அறுந்து விழும்படி செய்கின்றாரோ, அவருக்கே இப்பொற்கிழி உரியதாம்' என்று எல்லா இடங்களுக்கும் பறையறைந்தும், தூதர்கள் மூலமும் அறிவித் தான். பலர் வந்து சொல்மாரி பொழிந்தும் பொற்கிழி அறுபடவில்லை.

## ஸ்ரீ பெரியாழ்வார் பேரருள்

திருமகள் நாதன் பெரியாழ்வாரைக் கொண்டு பரத்துவத்தைப் பிரகாசிப்பிக்க எண்ணி, அவர்தம் கனவில் தோன்றி, பாண்டியன் அவைக்குச் சென்று பொற்கிழி தானே அறும் வண்ணம் உண்மைப் பொருளை உணர்த்தும்படி அறிவிக்க, அங்ஙனமே விட்டுசித்தரும் இறைவன் பணியை மேற்கொண்டு, மறுநாட்காலை பாண்டியனது நகர் சேர்ந்தார். பாண்டிய வேந்தனாகிய வல்லபதேவனும், செல்வ நம்பியும் சென்று விட்டுசித்தரை வரவேற்றனர். விட்டுசித்தரைக் கண்ட அரசன் வணங்கி, 'அருளிற்சிறப்புடையீர்! தங்கள் வருகையால் என் மனம் மகிழ்ச்சியுற்றது!' என்று விஜ்ஞாபநம் செய்தான். அரசனது அவையில், அரசன் விட்டுசித்தருக்குச் சிறந்ததோர் இருக்கை ஈந்து அமரச் செய்தான்.

அப்பொழுது அங்குள்ள புலவர்கள் விட்டுசித்தரை அவமதிக்கும் முறையில் பார்த்து, "கற்றோர் அவையில் சென்று ஒன்றினைக் கூறுதலால் உண்டாகும் இழிவை எண்ணாது வந்தமை 'குருட்டுக்கண் இருட்டைக் கண்டு அஞ்சுமோ?' என்ற பழமொழிக்கு ஒப்பாய் உள்ளது," என்று தங்களுக்குள் விட்டுசித்தரைக் குறித்து உரையாடிக்கொண்டனர்.

புலவர்கள் இங்ஙனம் பேசிக்கொண்டிருக்கையில் அரசன் குறிப்பின்படி செல்வ நம்பி, விட்டுசித்தரை நோக்கி, 'தாங்கள் வேதமுடிவாயுள்ள உண்மைப் பொருளை எங்களுக்கு உணர்த்தல் வேண்டும்,' என உரைத்தார்.

வைகுந்த வாசனாகிய திருமாலின் திருவருள் பெற்றது காரணமாக அவையின் இடையில் வந்து, அவை வணக்கம் கூறிய விட்டுசித்தர், வேதமுடிவாயுள்ள உண்மைப் பொருளைத் தம் சொற்கள் கொண்டு விளக்கவுரை ஆற்றினார். விட்டுசித்தரால் ஆற்றப்பட்ட அவ்விளக்கவுரை, கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வேட்பமொழிவதாகிய சொல்லால் அமைந்த ஆய்வுரையாகவும், அவரால் கூறப்பட்ட சொற்கள் யாவும் பிறிதோர் சொல் அச்சொல்லை வெல்லுந் தன்மையில்லாமல் விழுமிய பொருள் பொதிந்தனவாகவும் உண்மைப் பொருளை உணர்தற்கு ஏற்றனவாகவும் இருந்தன. உடனே பொற்கிழி கட்டியுள்ள கம்பம் பொற்கிழி அவர் அருகு வரும்படி வளையலாயிற்று. விட்டுசித்தரும் பொற்கிழியை அறுத்துக்கொண்டார். வேந்தனும், செல்வநம்பியும், ஏனையோரும் விட்டுசித்தரை வணங்கிப் போற்றினர்.

பின்னர் அரசன் கட்டளையினால் ஏவலர் அந்நகரின் மாடந்தோறும் கொடிகளை ஏற்றி, தோரணக் கம்பங்கள் நாட்டி, மலர் மாலைகள் கட்டித் தொங்க விட்டனர். வல்லபதேவனாகிய பாண்டிய மன்னன் விட்டுசித்தருக்கு 'பட்டர்பிரான்' என்னும் பட்டம் வழங்கி, பட்டத்து யானையின்மீது அவரை ஏற்றி, நகர் உலாவரச் செய்தான். விட்டுசித்தர் உலா வரும் வீதிகள் யாவும் அலங்காரம் செய்யப்

பட்டிருந்தன. 'வேதங்கள் ஓதி விரைந்து கிழியறுத்த பட்டர்பிரான் வந்தார்' என்னும் வாழ்த்தொலிகள் முழங்க, விட்டுசித்தர் வீதி தோறும் உலா வரும் விழா, சீரிய முறையில் நடைபெற்றது.

அங்ஙனம் உலா வருதல் நிகழும் காலத்து, பரமபதத்தின் தலைவராய் விளங்கும் உலக ரட்சகரான திருமால், அயன், அரன், இந்திரன் முதலியோர் புடைசூழக் கருடன்மீது இவர்ந்து வந்து, விட்டு சித்தருக்கும் அரசனுக்கும் காட்சியளித்தார்.

முதலும் ஈறும் இல்லாத முதற்பொருள் ஆகியவரும், அமரர்கள் அதிபதியும், உயர்வற உயர்நலம் உடையவரும், பரமபதத்தில் சித்தரும் முத்தரும் ஸேவிக்க விளங்கும் பரம்பொருள் ஆனவரும், பீதாம்பரதாரியுமாகிய பரந்தாமனது எழிலைக் கண்ணுற்ற விட்டு சித்தர் என்னும் நாமம் கொண்ட பட்டர்பிரான் அன்பின் மிகுதியினால் இறைவர் எழில் நிலை பெற்றிருக்கும் வகையில் பல்லாண்டு பாடி வாழ்த்துவாராயினார்.

பின்னர் அரசனிடமும் செல்வநம்பியிடமும் விடை பெற்றுக் கொண்டு வில்லிபுத்தூரை அடைந்த விட்டுசித்தர், கிழியறுத்துக் கொணர்ந்த பொன்னைக் கொண்டு வடபெருங்கோயிலைப் புதுப்பித்து அதனை அங்குள்ள திருமாலுக்கே ஆக்கினார். பின்பு கண்ணனது திரு அவதாரச் சிறப்பினை நாற்பத்து நான்கு திருமொழிகளாகப் பாடினார். இவற்றின் மொத்தப் பாசுரங்கள் நானூற்று அறுபத் தொன்று ஆகும். திருப்பல்லாண்டின் பாசுரங்கள் பன்னிரண்டு ஆகும். ஆக விட்டுசித்தரால் பாடப்பட்ட பாசுரங்களின் எண்ணிக்கை நானூற்று எழுபத்து மூன்று ஆகும். அவருடைய பாசுரங்கள் பெரியாழ்வார் திருமொழி என்று வழங்கப்பட்டு, நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் முதற்கண் அமைக்கப்பட்டுள்ளன.

விட்டுசித்தர் திருமாலைப் பல்லாண்டு பாடி வாழ்த்தினமையால், 'பெரியாழ்வார்' என்று அவரை வைணவப் பெரியார்கள் வழங்குவார்கள்.

பெற்றோரால் விட்டுசித்தர் என்று வழங்கப்பட்ட அவருக்கு வழங்கும் வேறு பெயர்கள் :

(1) பெரியாழ்வார், (2) பட்டர் பிரான்,
(3) ஸ்ரீவில்லிபுத்தூர்க்கோன், (4) கிழியறுத்தான்,
(5) புதுவைக்கோன்.

பெரியாழ்வாரால் பாடல் பெற்ற தலங்கள் : (1) திருவரங்கம், (2) திருவெள்ளறை, (3) திருப்பேர்நகர், (4) கும்பகோணம், (5) திருக் கண்ணபுரம், (6) திருச்சித்ரகூடம், (7) திருமாலிருஞ்சோலைமலை, (8) திருக்கோட்டியூர், (9) ஸ்ரீ வில்லிபுத்தூர், (10) திருக்குறுங்குடி, (11) திருவேங்கடம், (12) திருவயோத்தி, (13) சாளக்கிராமம், (14) வதிரியாச்சிரமம், (15) திருக்கங்கைக் கரைக்கண்டம், (16) துவாரகை, (17) வடமதுரை, (18) திருவாய்ப்பாடி, (19) திருப்பாற்கடல், (20) பரம பதம் என்பனவாகும்.

# வாழ்த்துப்பா

"நல்லதிருப் பல்லாண்டு நான் மூன்றேன் வாழியே
நானூற்றறு பத்தொன்றும் நமக்குரைத்தான் வாழியே

சொல்லரிய ஆனிதனிற் சோதிவந்தான் வாழியே
தொடை சூடிக் கொடுத்தவள் தம் தொழுந்தமப்பன் வாழியே

செல்வநம்பி தன்னைப்போற் சிறப்புற்றான் வாழியே
சென்று கிழி அறுத்துமால் தெய்வமென்றான் வாழியே

வில்லிபுத்தூர் நகரத்தை விளக்கினான் வாழியே
வேதியர்கோன் பட்டர்பிரான் மேதினியில் வாழியே."

— ஆழ்வார்கள் வாழித் திருநாமம்.




மானஸீகமாக
'ஓம்' தரித்துள்ள
வலது காது

# நம் குழந்தைகளுக்குக்
# காது குத்தலும்
# கண்ணன் கருணையும்




மானஸீகமாக
'ஓம்' தரித்துள்ள
இடது காது

## நம் மக்கட்செல்வங்களுக்குப்

## பெரியாழ்வார் தந்த பெருஞ்செல்வம்

(பெரியாழ்வார் திருமொழி 2-ஆம் பத்து 3-ஆம் திருமொழி)

ஸகல கல்யாணகுணநிதியாய் விளங்கும் ஸ்ரீமந் நாராயண னுடைய குணங்களாகிய அமுதக் கடலில் ஆழ்ந்து, ஆனந்தானு பவம் பெற்று, எம்பெருமானுடைய திவ்யகுண சேஷ்டிதங்களை ஆழ்வார்கள் உள்ளமுருகப் பாடியருளிய பாசுரங்களே 'திவ்ய ப்ரபந்தங்கள்' எனப் போற்றப்படுகின்றன.

ஆழ்வார் பன்னிருவருள் பெருமை பெற்ற பெரியாழ்வார் கண்ணன் திருவிளையாடல்களிற்பெரிதும் ஈடுபட்டார். ச்ரிய: பதியான பகவானுக்குப் பல்லாண்டு பாடிப் பரம ஆநந்தம் அடைந்த அப்பெரியார், தாம் ஒரு பக்தராய் நேரிடையாகப் பகவத் குணாநுபவம் பண்ணியதோடு திருப்தி கொள்ளாமல், தம்மைக் கண்ணனின் தாயான அசோதையாகப் பாவனை செய்துகொண்டு கண்ணனது திருவவதாரச் சிறப்பைக்கண்டு,

திருப்பாதாதிகேச வர்ணனம் செய்து,

தாலாட்டி,
அம்புலி காட்டி,
செங்கீரைப் பருவமும்
சப்பாணிப் பருவமும்
தளர்நடைப் பருவமும்
அச்சோப் பருவமும் கண்டு,
புறம் புல்கல் (முதுகைத் தழுவுதல்),
பூச்சி காட்டுதல்,

முலையுண்ணல் முதலிய செயல்களைக் காட்டி,

## காது குத்தலால் பகவானின் பன்னிருநாமப் பெருமையை விளங்க வைத்து,

நீராட்டி,
குழல் வாரக் காக்கையை வாவென்றழைத்து,
'கோல் கொண்டு வா' என்று ஏவி,
பூச்சூட்டி,
காப்பிட்டு அழகு செய்து,
அவன் 'பாலக்ரீடைகளை'க் கண்டு,
அவன் சேஷ்டைகளை அயலகத்தார் முறையிட,
'அம்மந்தாரேன்' என்றழைத்து,
கண்ணன் கன்றின் பின் சென்றதை எண்ணி வருந்தி,
அவன் வரவு கண்டு மகிழ்ந்து,
காலிப்பின்வரும் கண்ணனைக் கண்டு கன்னியர்கள் காமுற,
அவன் கோவர்த்தன கிரியைக் குடைகொள் வண்ணத்தை வருணித்து,
குழலூதலின் சிறப்பைச் சிறக்கச் செப்பி,
மாயன்மேல் மகள் மாலுறு கோலத்தைத் தாய் கூற,
மாயன் பின் சென்ற மகளைத் தாயவள் உன்னி அதவ (நெருக்க)

இவ்வாறு யௌவனம் பொலியும் கண்ணன் திருவிளையாடல்களைத் தாம் அசோதையாகவும், மற்றப் பெண்டிராகவும் பாவித்துப் பாடி யனுபவித்துள்ளார்.

இவ்வாழ்வாருடையதும், ஏனைய ஆழ்வார்களுடையவுமான திருவாய் மலர்ந்தருளிச் செய்த பகவத்குண கணங்களைப் போற்றும் பாசுரங்களை ஒவ்வொரு வீட்டிலும் குழந்தைகளுக்கு நடக்கும் காது குத்தல், பூச்சூட்டல், காப்பிடல் முதலிய சுபச்சடங்குகளின் போது சுற்றத்தார்கள் ஒன்று கூடிப் பாடினால், அது எம்பெருமானுக்கும், எம்பெருமானைக் கண்ணாரக் கண்டு வாயார வாழ்த்திய ஆழ்வார்களுக்கும் உகப்பாகி, குழந்தைகளுக்கும் குடும்பத்தோர்க்கும் ஸகல க்ஷேமங்களும் தருமன்றோ!

குறிப்பு :

இங்ஙனம் அனுஸந்திக்கும் கோஷ்டியில் ஆசார்யனிடம் ஸமாச்ரயணம் பெற்ற வைஷ்ணவர்கள் இருந்தால் இவர்கள் ஆசாரத்துடன் பன்னிரு திருமண் காப்புகள் அணிந்து இப்பாசுரங்களை அனுசந்தித்தல் நலம்.

ஒவ்வொரு வீட்டிலும் குழந்தைகளுக்கு முதல் வயது பூர்த்தியாகும் "ஆண்டு நிறைவு" தினத்தன்று அனேகமாகக் 'காது குத்தல்' என்னும் சுபச் சடங்கும் செய்வார்கள்.

குழந்தைகளுக்குக் 'காது குத்துதல்' என்பது ஒரு முதற் சடங்கும் முக்கியச்சடங்குமாகும். இயற்கையாகப் பிரணவ வடிவில் அமைந்துள்ள காதுகளில் சுபவேளையில் ஒரு சிறு துளையைக் குத்துவ தால் அவை பிந்து ரூபம் பெற்று, அந்த பிந்துவின் சேர்க்கையால் காதுகள் முழு உருவம் பெற்ற பிரணவமாகின்றன! இக்காது குத்தலால் தம் சிரஸின் இரு புறமும் 'ஓம்' தரித்தவைகள் ஆகின்றன நம் குழந்தைகள்.

'எண்சாண் உடம்புக்குச் சிரஸே பிரதானம்' என்பது பழமொழி. இதற்குக் காரணம், மனிதனை இயக்குவிக்கும் முக்கிய அங்கங்களான கண், வாய், மூக்கு, காது இவற்றுடன் மூளை என்னும் முக்கியமான பாகமும் தலையில் அடங்கியிருப்பதுதான். மேற்கூறிய நான்கு அங்கங்களில் காதுதான் சிரஸின் கவசம் போல அமைந்துளது. தவிர ஸத்விஷயங்களைக் கேட்டுக் கிரஹித்து மூளைக்கு அனுப்பி, பகவானைப் பற்றிச் சிந்திக்கச்செய்யும் கருவியும் அதுதான். எந்த ஒரு விஷயத் தையும் ஒருவர் கண்ணால் பார்த்தும் படித்தும் தாமே தெரிந்துகொள் வதைவிட, பெரியோர்களிடம் உபதேசமாகக் கேட்டறிவது தம்மனத் தில் நன்கு பதிந்து நல்ல பலன்களையும் கொடுக்குமென்பது பெரி யோர்கள் கருத்து. இதற்கு ஆஸ்பதமாய் இருக்கும் காது எவ்வளவு புனிதத்தன்மை வாய்ந்ததென்பது இதனால் விளங்கும்.

இச்சடங்கைக் கொண்டாடுவதில் அடங்கியுள்ள தத்துவத்திற்கு மற்றொரு விதமாகவும் விளக்கம் கூறலாம்: எந்த ஒரு ஸத்விஷயத் தையும் ஆரம்பிக்கும் முன்னர்ப் பிரணவ மந்திரமான 'ஓம்' என்பதை உச்சரித்துப் பிறகே ஆரம்பிக்கிறோம். எனவே, ஏற்கெனவே மேலே கூறியுள்ளபடி, பிரணவ ரூபமான காதில் குழந்தைக்கு ஓர் ஆண்டு பூர்த்தியானவுடன் பிந்துவை ஏற்படுத்துவது குழந்தைக்குப் பிரண வத்தை உபதேசம் செய்வதற்கு, அல்லது குழந்தையின் தேகமான ஆலயத்தில் பிரணவ ரூபத்தைப் பிரதிஷ்டை செய்வதற்கு ஒப்பாகும் எனலாம். அதாவது, குழந்தை வளர வளர, பகவத்சிந்தனையில் ஈடுபடுவதற்கு அஸ்திவாரம் இடுவது போல அமைகிறது இந்த வைபவம்.

மேலும், இங்ஙனம் செய்வதால், காதுகள் இரண்டும் மூளைக்கும் இரு கவசம் போல அமைந்து, ஸத்விஷயங்களை மாத்திரம் கிரஹித்து மூளைக்கு எட்டும்படியும், ஸத்விஷயங்களல்லாதவைகளை விரட்டி மூளைக்கு எட்டவொட்டாமலும் செய்யும் ரக்ஷையாகவும் விளங்கு கின்றது இந்தச் சடங்கு.

ஆகவே, அத்தருணத்தில் கண்ணனின் 'காது குத்தல்' விஷய மாகப் பெரியாழ்வார் அருளிச்செய்த பாசுரங்கள் பதின்மூன்றையும் பந்துக்கள் ஒன்றுகூடிப் பாடினால், அப்பாசுரங்களில் பதிந்துள்ள பகவானின் பன்னிரு திருநாமங்கள் அக்குழந்தையின் செவிகளில் பாய்ந்து அமிர்தமாய்த் தோய்ந்து அக்குழந்தைக்கும் குடும்பத்

த்தார்க்கும் ஆயுராரோக்கிய பாக்கியங்கள் உண்டாகும்படி பக வானும் ஆழ்வார்களும் அநுக்ரஹிப்பது திண்ணம்.

**மிக முக்கியம் :** இப்பாசுரங்களை ச்ரிய : பதியான பகவானின் பல அவதார (ஜயந்தி) தினங்களிலும் அனுஸந்திக்கலாம். அத்தகைய அவதாரதினங்களில் சிலவற்றின் விவரம் கீழே கொடுக்கப் பட்டுள்ளன :—

1. சைத்ரசுக்ல நவமி — ஸ்ரீராம நவமி. இது நவமி மத்யாஹ்நத்தில் இருக்கவேண்டும். மூன்று முஹூர்த்தத்துக்கு வ்யாப்தமான அஷ்டமீ வேதை இல்லாமலிருக்க முனித்ரய ஸ்ரீராமநவமி. இது சித்திரை மாதத்தில் ஸூர்யோதயத்தில் அஷ்டமீ வேதையில்லாமலிருந்தால் ஸர்வஸ்ரீராமநவமி.

2. சித்திரை மீ ஹஸ்தம்—காஞ்சீபுரம் ஸ்ரீ தேவப்பெருமாள் ஜயந்தி.

3. சைத்ரபகுள பஞ்சமி — மத்ஸ்ய ஜயந்தி. அபராஹ்னத்தியில் வ்யாப்தி வேண்டும்.

4. சைத்ரபகுளத்ரயோதசி — வராஹ ஜயந்தி. இதுவும் அபராஹ்னவ்யாப்தி வேண்டும்.

5. வைசாகசுத்தத்ருதீயை — பலராம ஜயந்தி. ஸாயாஹ்ன காலத்திலிருக்க வேண்டும்.

6. ஷை சதுர்த்தசி—ஸ்ரீநரஸிம்ம ஜயந்தி. இது ஸூர்யாஸ்தமனத்துக்குமேல் இருக்க வேண்டும். மடம் முனித்ரய ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கு உதயமுதல் மூன்று முகூர்த்தத்ரயோதசி வேதை கூடாது.

7. ஜ்யேஷ்ட பகுளத்வாதசி — கூர்ம ஜயந்தி. ஸாயங்கால வ்யாப்தி.

8. ச்ராவண பகுள அஷ்டமி — ஜன்மாஷ்டமி. அஷ்டமி அர்த்த ராத்திரியிலிருக்க வேண்டும். முனித்ரய ஸம்ப்ரதாயத்துக்கு அர்த்த ராத்திரிகாலத்தில் ஸப்தமி க்ருத்திகை வேதை கூடாது. ஸிம்ஹமாஸமாக விருக்கவேண்டும். ஸிம்ஹரோஹிணி— ஸ்ரீஜயந்தி. உதயத்தில் ஸப்தமி க்ருத்திகை வேதை உண்டு. ஸிம்ஹ க்ருஷ்ண அஷ்டமி அர்த்த ராத்திரி வியாப்தி வைகானஸ ஸ்ரீஜயந்தி

9. ஆவணி மீ ச்ராவணம்—ஸ்ரீ ஹயக்ரீவ ஜயந்தி.

10. பாத்ரபதசுக்ல த்ருதீயை — கல்கி ஜயந்தி. ஸாயாஹ்னத்திலிருக்க வேண்டும்.

11. பாத்ரபதசுக்ல த்வாதசி—வாமன ஜயந்தி. மத்யாஹ்னத்திலிருக்க வேண்டும்.

12. மார்கசிரபகுள த்ருதீயை – பரசுராம ஜயந்தி. மத்யாஹ்னத்தி லிருக்க வேண்டும்.

13. பங்குனி மீ ரேவதி — பெரிய பெருமாள் (ஸ்ரீரங்கநாதர்)

இதர நக்ஷத்திரங்கள் 12-நாழிகை இருக்கவேண்டும்.

ஆனல், அங்ஙனம் அனுஸந்தித்தல் எங்ஙனம் பொருந்தும் என்ற கேள்வி எழலாம். பிரதி வருஷமும் அந்தந்தத் திருநக்ஷத்திரத்திலும் பகவான் அந்தந்த அவதாரத்தில் ஜனிப்பதாகவே நாம் கருது கிரோமல்லவா? கடந்த வருஷம் குறிப்பிட்ட அவதார உத்ஸவத்தைக் கொண்டாடியிருப்போமாதலால், மறு வருஷம் அதே அவதார தினத்தில் இந்தத் தெய்விகக் குழந்தைக்கு ஓர் ஆண்டு பூர்த்தியாகிக் காதணிவிழா நடத்துவதாகக் கருதி இப்பாசுரங்களை அனுஸந்திப்பது சாலவும் பொருந்தும். ஆனல், பிரதி வருஷம் இங்ஙனம் அனுஸந் திப்பதற்கு முன், முதலில் அவதார உத்ஸவத்தைக் கொண்டாடி நடத்தினல் மேற்கூறியபடி அடுத்த வருஷத்தில் இப்பாசுரங்களை அனுஸந்தித்துக் காதணி விழாக் கொண்டாடுவது பொருத்தமாக அமையும்.

முக்கியமாக, ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தி விழாவை எடுத்துக்கொண் டால், அதற்கும் இப்பாசுரங்களுக்கும் உள்ள நெருங்கிய ஸம்பந்தம் தெளிவாக விளங்கும். முதலாவதாக, ஆழ்வார் திருவாக்கின்படியே இப்பாசுரங்கள் ஸ்ரீ கண்ணபிரானைத் திருமகனைப் பெறும் பரம பாக்யத்தைப் பெற்ற ஸ்ரீ யசோதா பிராட்டி அவனுக்கு மகரக்குழையிட வேண்டி அழைக்கும் கட்டத்தை வர்ணிக்கின்றன. இதில் குறிப்பிடப் பட்டுள்ள தாம்பூலம் (1-ஆம் பாசுரம்) பலாப்பழம் (4-ஆம் பாசுரம்) அப்பம் (5-ஆம் பாசுரம்), கனிகள் (11-ஆம் பாசுரம்), நாவற்பழம் (12-ஆம் பாசுரம்) போன்ற ஸ்ரீ க்ருஷ்ண பகவானுக்கு உகப்பானவை களான நைவேத்யங்களையே நாம் ஸ்ரீ க்ருஷ்ண ஜயந்தி தினத்தில் பகவானுக்கு நிவேதனம் செய்கிரோம். எனவே, ஸ்ரீ க்ருஷ்ண ஜயந்தி தினத்தில், ஸ்ரீ க்ருஷ்ணஷ்டோத்தர சத நாமாவளி, ஸ்ரீ லக்ஷ்மீ அஷ்டோத்தர சத நாமாவளி, ஸ்ரீ கோபால விம்சதி முதலிய ஸ்தோத் ரங்களுடன் இந்த (பெரியாழ்வார் திருமொழி 2-ஆம் பத்து, 3-ஆம் திருமொழி) **பன்னிருநாம அந்தாதியையும்** குடும்பத்திலுள்ள எல்லோ ரும் சேர்ந்து கோஷ்டியாக, பக்தியுடனும் உருக்கத்துடனும் அனுஸந்தித்தால், இவைகளில் வரும் பன்னிரு திருநாமங்களைப் பூண்ட ச்ரியப்பதியான பகவான் **ஸ்ரீ வைகுந்தத்திலிருந்து** எழுந்தருளி **அந்தப் பூஜை அறையில் பிரஸன்னமாயிருந்து அனுக்ரஹிப்பது நிச்சயம்.**

சுருங்கக்கூறின் இப்பாசுரங்களை நம் குழந்தைகளின் காதுகுத்தல் வைபவத்தைக் கொண்டாடும் ஸமயத்தில் மட்டுமன்றி, பகவானின் பல்வேறு திருவவதார உத்ஸவங்களைக் கொண்டாடும் ஸமயங்களிலும்

மற்றும் இதர பண்டிகைத்தினங்களிலும் அனுஸந்திக்கலாம். இப் பாசுரங்கள் மனப்பாடமாவதற்கு ஹேதுவாகப் பிரதிமாதமும் மேலே கொடுக்கப்பட்டுள்ள திதிகளிலும் திருநக்ஷத்ரங்களிலும் அனுஸந்திக் கலாம். இப்பழக்கத்தால் மேலும் பலப் பல திவ்யப்ரபந்தப் பாசுரங்களை மனப்பாடம் செய்யும் உத்தமமான பேராசையும் நமக்கு ஏற்பட்டு, அதனால் நம் ஜன்மம் ஸாபல்யம் அடையும். இங்ஙனம் அடிக்கடி நம் க்ருஹங்களில் அனுஸந்திப்பதால், நம் வீடே பகவானுடைய திருக் கோயிலாய் மாறி, அங்கு எப்பொழுதும் புனிதமானதும் தெய்விக மானதுமான சூழ்நிலை நிலவி வந்து ஸர்வ மங்களங்களும் ஏற்படும்.

## முடிவுரை

நம் குழந்தைகளுக்குத் தக்க வயதில் விவாஹம் ஏற்படுவதற்கு ஸ்ரீ ஆண்டாள் அருளிச் செயலான 'வாரணமாயிரம்' அநுஸந்தித்து வருவது நலம் என்பது பெரியோர் ஸித்தாந்தம். அப்படி லோகமாதா அருளினால் ஏற்படும் விவாஹம் விமரிசையாக நடந்தேறி, தம்பதிகள் ஸகல பாக்கியங்களுடன் பல்லாண்டு வாழ, அதே 'வாரணமாயி ரத்தை' விவாஹ ஸமயங்களிலும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒன்று கூடிப் பாடுவார்கள்.

குழந்தை பெரிதானவுடன் தக்க வயதில் நல்ல விவாஹம் ஏற்படுவதற்கு அனுகுணமாக (Foundation) ஆண்டாளின் திருத் தகப்பனாரான ஸ்ரீ கருட அமிசம், மறையின் பொருள், மங்கள ஸ்வரூபம் என்று கருதப்படுபவரான பெரியாழ்வார் அருளிய 'திரு மொழி 2ஆம் பத்து—3ஆம் திருமொழி' பாக்களை மனம் உருகிப் பலர் கூடிக் குழந்தைக்குக் காது குத்தும் ஸமயம் அதன் காதுகளில் படும்படி பாடுவது, ஆண்டாளுக்கும் பரமதிருப்தி அளிக்குமன்றோ? ஸ்ரீ ஆண் டாள் 'ஸ்ரீ தேவி பூதேவி, நீளாதேவி' ஆகிய மூவர் அமிசம் என்றும் கருதப்படுவதால் அவள் தகப்பனாரான பெரியாழ்வாரின் இப்பாசுரங் களை அநுஸந்திப்பதால் இம்மூன்று லோக மாதாக்களின் கிருபையும் வேத கீதத்தால் ஏற்படும்பலனும் நமக்குக் கிட்டும் என்பது ஸத்தியம்.

|| ஸர்வே ஜனாஸ் ஸுகினோ பவந்து ||

ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளே சரணம்

ஸ்ரீ பெரியாழ்வார் திருவடிகளே சரணம்

கண்ணன் கழலிணை
நண்ணும் மனமுடையீர்!
எண்ணும் திருநாமம்
திண்ணம் நாரணமே.

ஸ்ரீ நம்மாழ்வார் திருவடிகளே சரணம்

## தனியன்கள்

**மிக மிக முக்கியம்:** முன்னுரையில் ஸ்ரீ பெரியாழ்வார் அருளிச் செய்த பன்னிருநாம அந்தாதியை அனேக ஸந்தர்ப்பங்களில் அனுஸந்திக்க வேண்டுவதன் அவசியம் விவரிக்கப்பட்டுள்ளது. அங்ஙனம் அனுஸந்திக்கும் ஒவ்வொரு ஸமயத்திலும் கீழே கொடுக்கப்பட்டுள்ள (பெரியாழ்வார்) தனியன்களை முதலில் அனுஸந்தித்த பின்னரே அப்பாசுரங்களை அனுஸந்தித்தல் வேண்டும்.

குருமுக மநதீத்ய ப்ராஹ வேதாநஸேஷாந்
நரபதி - பரிக்லுப்தம் ஸுல்க மாதாதுகாம: |
ஸ்வஸுர மமரவந்த்யம் ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத்
த்விஜகுல திலகம் தம் விஷ்ணுசித்தம் நமாமி |

மின்னார் தடமதிள்சூழ் வில்லிபுத்தூ ரென்றுஒருகால்
சொன்னார் கழற்கமலம் சூடினோம்;—முன்னாள்
கிழியறுத்தா னென்றுரைத்தோம்; கீழ்மையினில் சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே! வந்து.

பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்று,
ஈண்டிய சங்க மெடுத்தூத—வேண்டிய
வேதங்க ளோதி விரைந்து கிழியறுத்தான்
பாதங்கள் யாமுடைய பற்று.

**ஸ்ரீ பெரியாழ்வார் திருவடிகளே சரணம்**

---

# காது குத்தல்

## (பன்னிரு நாமப் பெருமை)

பெரியாழ்வார் திருமொழி 2-ஆம் பத்து, 3-ஆம் திருமொழி

•

போய்ப்பா டுடையநின் தந்தையும் தாழ்த்தான்;
பொருதிறல் கஞ்சன் கடியன்;
காப்பாரு மில்லை கடல்வண்ணா! உன்னை
தனியேபோ யெங்கும் திரிதி,
பேய்ப்பால் முலையுண்ட பித்தனே! **கேசவ**
நம்பீ! உன் **னைக்காது** குத்த,
ஆய்ப்பாலர் பெண்டுக ளெல்லாரும் வந்தார்
அடைக்காய் திருத்திநான் வைத்தேன்.

வண்ணப் பவள மருங்கினிற் சாத்தி
மலர்ப்பாதக் கிண்கிணி யார்ப்ப,
நண்ணித் தொழுமவர் சிந்தை பிரியாத
**நாராய ணா**! இங்கே வாராய்,
எண்ணற் கரிய பிரானே! திரியை
எரியாமே **காதுக்** கிடுவன்,
கண்ணுக்கு நன்று மழகு முடைய
கனகக் கடிப்புமி வையா.

வையமெல் லாம்பெறும் வார்கடல் வாழும்
மகரக் குழைகொண்டு வைத்தேன்,
வெய்யவே **காதில்** திரியை யிடுவன்நீ
வேண்டிய தெல்லாம் தருவன்,
உய்யஇவ் வாயர் குலத்தினில் தோன்றிய
ஒண்சுட ராயர் கொழுந்தே!
மையன்மை செய்திள வாய்ச்சிய ருள்ளத்து
**மாதவ னே**! இங்கே வாராய்.

வணநன் றுடைய வயிரக் கடிப்பிட்டு
வார்**காது** தாழப் பெருக்கி,
குணநன் றுடையர்இக் கோபால பிள்ளைகள்
**கோவிந்தா**! நீசொல்லுக் கொள்ளாய்;

இணைநன் றழகிய இக்கடிப் பிட்டால்
இனிய பலாப்பழம் தந்து,
சுணைநன் றணிமுலை யுண்ணத் தருவன்நான்
சோத்தம் பிரானிங்கே வாராய்.

5. சோத்தம் பிரானென் றிரந்தாலும் கொள்ளாய்
சுரிகுழ லாரொடு நீபோய்,
கோத்துக் குரவை பிணைந்திங்கு வந்தால்
குணங்கொண் டிடுவனோ நம்பீ!
பேர்த்தும் பெரியன அப்பம் தருவன்
பிரானே! திரியிட வொட்டில்,
வேய்த்தடந் தோளார் விரும்பு கருங்குழல்
விட்டுவே! நீயிங்கே வாராய்.

6. விண்ணெல்லாம் கேட்க அழுதிட்டா யுன்வாயில்
விரும்பி யதனைநான் நோக்கி,
மண்ணெல்லாம் கண்டென் மனத்துள்ளே யஞ்சி
மதுசூத னேஎன் றிருந்தேன்,
புண்ணேது மில்லைஉன் காது மறியும்
பொறுத்திறைப் போதிரு நம்பீ!
கண்ணா! என் கார்முகி லே! கடல் வண்ணா!
காவல னே!முலை யுணாயே.

7. முலையேதும் வேண்டேனென் றோடிநின் காதில்
கடிப்பைப் பறித்தெறிந் திட்டு,
மலையை யெடுத்து மகிழ்ந்துகல் மாரி
காத்துப் பசுநிரை மேய்த்தாய்,
சிலையொன் றிறுத்தாய் திரிவிக் கிரமா!
திருவாயர் பாடிப் பிரானே!
தலைநிலாப் போதேஉன் காதைப் பெருக்காதே
விட்டிட்டேன் குற்றமே யன்றே?

8. என்குற்ற மேயென்று சொல்லவும் வேண்டாகாண்
என்னைநான் மண்ணுண்டே னாக,
அன்புற்று நோக்கி அடித்தும் பிடித்தும்
அனைவர்க்கும் காட்டிற்றி லையே,

வன்புற் றரவின் பகைக்கொடி வாமன
நம்பீ! உன் காதுகள் தூரும்,
துன்புற் றனவெல்லாம் தீர்ப்பாய் பிரானே!
திரியிட்டுச் சொல்லுகேன் மெய்யே.

9. மெய்யென்று சொல்லுவார் சொல்லைக் கருதித்
தொடுப்புண்டாய் வெண்ணெயை யென்று,
கையைப் பிடித்துக் கரையுர லோடென்னைக்
காணவே கட்டிற்றி லையே,
செய்தன சொல்லிச் சிரித்தங் கிருக்கில்
சிரீதரா! உன்காது தூரும்,
கையில் திரியை யிடுகிடா யிந்நின்ற
காரிகை யார்சிரி யாமே.

10. காரிகை யார்க்கு முனக்கு மிழுக்குற்றென்
காதுகள் வீங்கி யெரியில்,
தாரியா தாகில் தலைநொந் திடுமென்று
விட்டிட்டேன் குற்றமே யன்றே?
சேரியில் பிள்ளைக ளெல்லாரும் காது
பெருக்கித் திரியவும் காண்டி,
ஏர்விடை செற்றிளங் கன்றெறிந் திட்ட
[illegible]கேசா! என்றன் கண்ணே!

11. கண்ணைக் குளிரக் கலந்தெங்கும் நோக்கிக்
கடிகமழ் பூங்குழ லார்கள்,
எண்ணத்து ளென்று மிருந்துதித் திக்கும்
பெருமானே! எங்க ளமுதே!
உண்ணக் கனிகள் தருவன் கடிப்பொன்றும்
நோவாமே காதுக் கிடுவன்,
பண்ணைக் கிழியச் சகட முதைத்திட்ட
பற்பநா பா! இங்கே வாராய்.

12. வாவென்று சொல்லியென் கையைப் பிடித்து
வலியவே காதில் கடிப்பை,
நோவத் தரிக்கிலு னக்கிங்கி ழுக்குற்றென்
காதுகள் நொந்திடும் கில்லேன்,

நாவற் பழங்கொண்டு வைத்தேன் இவைகாணாய்
நம்பீ!முன் வஞ்ச மகளைச்
சாவப்பா லுண்டு சகடிறப் பாய்ந்திட்ட
தாமோத ரா! இங்கே வாராய்.

13. வார்காது தாழப் பெருக்கி யமைத்து
மகரக் குழையிட வேண்டிச்
சீரால சோதை திருமாலைச் சொன்னசொல்
சிந்தையுள் நின்று திகழ,
பாரார் தொல்புக ழான்புது வைமன்னன்
பன்னிரு நாமத்தாற் சொன்ன,
ஆராத அந்தாதி பன்னிரண் டும்வல்லார்
அச்சுத னுக்கடி யாரே.

ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளே சரணம்!
ஸ்ரீ பெரியாழ்வார் திருவடிகளே சரணம்!
கண்ணன் கழலிணை
நண்ணும் மனமுடையீர்!
எண்ணும் திருநாமம்
திண்ணம் நாரணமே!
ஸ்ரீ நம்மாழ்வார் திருவடிகளே சரணம்!



# ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச் செய்த பன்னிருநாமம்

கேசவன் முதல் தாமோதரன் வரையில் உள்ள 12 திருநாமங்களைச் சொல்லி அந்த அந்தத் திருமண் காப்புகளில் அவ்வவ்வெம்பிரான்களின் திருமேனிநிறம், அவர்கள் அணிந்திருக்கும் ஆயுதங்கள், அவர்கள் தலைவராய் வீற்றிருக்கும் திசை, நம் சரீரத்தில் புண்ட்ர ரூபமாய் அவர்கள் வசிக்கும் பாகம்•ஆகியவற்றை ஸ்ரீதேசிகன் வெளியிட்டிருக்கிறார். புண்ட்ரம் தரிக்கும்போது இப்பிரபந்தம் அவசியம் அநுஸந்திக்க வேண்டியதாகும்.

## பன்னிருநாமம்

### தனியன்கள்

ராமாநுஜ தயாபாத்ரம் ஜ்ஞாந வைராக்ய பூஷணம் |
ஸ்ரீமத் வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்த தேசிகம் |

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

பன்னிரு நாமந் திருவத்தி யூர்ப்பரன் பாதமென்று
நன்னிற நாமம் படைதிக்கி யாவையு நாமறியத்
தென்னந் தமிழ்த்தொடைச் சீரார் கலித்துறை யோதியீந்தான்
மின்னறு நூலமர் வேங்கட நாதனந் தேசிகனே.

கார்கொண்ட மேனியன் பாதாம் புயத்தைக் கருத்திருத்தி
ஏர்கொண்ட கீர்த்தி யிராமா னுசன்ற னிணையடிசேர்
சீர்கொண்ட தூப்புற் றிருவேங்க டாரியன் சீர்மொழியை
ஆர்கொண்டு போற்றினு மம்மால் பதத்தை யடைவிக்குமே.

## பன்னிருநாமம்

*சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்*

**கேசவ** னுய்நின்று கீழைத் திசையிலு நெற்றியிலும்
தேசுடை யாழிகள் நான்குடன் செம்பசும் பொன்மலைபோல்
வாசி மிகுத்தெனை மங்காமற் காக்கு மறையதனுல்
ஆசை மிகுத்த அயன்மக வேதியி லற்புதனே. 1

**நாரண** னுய்நல் வலம்புரி நாலு முகந்தெடுத்தும்
ஊரணி மேக மெனவே உதரமு மேற்குநின்றும்
ஆரண நூல்தந் தருளால் அடைக்கலங் கொண்டருளும்
வாரண வெற்பில் மழைமுகில் போல்நின்ற மாயவனே. 2



திருவஹீந்த்ரபுரத்தில் தான் மிகவும் ஈடுபட்டிருந்த அடியவர்க்கு மெய்யனை
ஸ்ரீ தெய்வநாயகப் பெருமாள் கோயிலில் அர்ச்சாமூர்த்தியாய்

புரட்டாசித் திருவோணத்திருநாளன்று ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஔஷதகிரிக்கு எழுந்தருளுவதற்கு முன் ஸ்வாமி ஸாதித்தருளியுள்ள 'பன்னிருநாமம்' பாகவத கோஷ்டியினரால் இந்த ஸந்நிதியில் அநுஸந்திக்கப்படுகின்றன.

மாதவ நாமமும் வான்கதை நான்கு மணிநிறமும்
ஓது முறைப்படி யேந்தி உரத்திலு மேலுமல்கிப்
போதலர் மாதுடன் புந்தியி லன்பாற் புகுந்தளிக்கும்
தூதனு நாதனு மாயதொல் லத்திகி ரிச்சுடரே. 3

கோவிந்த னென்றுங் குளிர்மதி யாகிக் கொடியவரை
ஏவுந் தனுக்க ளுடன்தெற் கிலுமுட் கழுத்துநின்று
மேவுந் திருவரு ளால்வினை தீர்த்தெனை யாண்டருளும்
பூவன் தொழஅத்தி மாமலை மேல்நின்ற புண்ணியனே. 4

விட்டு வலவயிற் றின்கண் வடக்கும் விடாதுநின்று
மட்டவிழ் தாமரைத் தாது நிறங்கொண்ட மேனியனைத்
தொட்ட கலப்பைகள் ஈரிரண் டாலுந் துயரறுக்கும்
கட்டெழிற் சோலைக் கரிகிரி மேல்நின்ற கற்பகமே. 5

மதுசூ தனனென் வலப்புயம் தென்கிழக் கென்றிவற்றில்
பதியா யிருந்துபொன் மாதுறை பங்கய வண்ணனுமாய்
முதுமா வினைக ளறுக்கும் முயலங்க ளீரிரண்டால்
மதுவா ரிளம்பொழில் வாரண வெற்பின் மழைமுகிலே. 6

திருவிக் கிரமன் திகழ்தீ நிறத்தன் தெளிவுடைவாள்
உருவிக் கரங்களில் ஈரிரண் டேந்தி வலக்கழுத்தும்
செருவிக் கிரமத் தரக்கர்திக் கும்சிறந் தாளுமிறை
மருவிக் கரிகிரி மேல்வரந் தந்திடு மன்னவனே. 7

வாமன னென்றன் வாமோ தரமும்வா யுவின்திசையும்
தாம மடைந்து தருண அருக்க னிறத்தனுமாய்ச்
சேம மரக்கலம் செம்பவி யீரிரண் டால்திகழும்
நாமங்கை மேவிய நான்முகன் வேதியில் நம்பரனே. 8

சீரார் சிரீதர னுய்ச்சிவன் திக்கு மிடப்புயமும்
ஏரா ரிடங்கொண் டிலங்குவெண் டாமரை மேனியனைப்
பாராய பட்டயம் ஈரிரண் டாலும் பயமறுக்கும்
ஆரா வமுதத்தி மாமலை மேல்நின்ற வச்சுதனே. 9

என்னிடி கேச னிறைகீ ழிடக்கழுத் தென்றிவற்றில்
நன்னிலை மின்னுரு வாய்நாலு முற்கரங் கொண்டளிக்கும்
பொன்னகில் சேர்ந்தலைக் கும்புனல் வேகை வடகரையில்
தென்ன னுகந்து தொழும்தேன வேதியர் தெய்வமொன்றே. 10

எம்பற்ப நாபனும் என்பின் மனம்பற்றி மன்னிநின்று
வெம்பொற் கதிரவ னுயிரம் மேவிய மெய்யுருவாய்
அம்பொற் கரங்களில் ஐம்படை கொண்டஞ்ச லென்றளிக்கும்
செம்பொற் றிருமதிள் சூழ்சிந்து ராசலச் சேவகனே. 11

தாமோ தரனென்றன் தாமங்கள் நாலு கரங்களிற்கொண்டு
ஆமோ தரமென ஆகத்தி னுட்புறம் பிறகழுத்தும்
தாமோ ரிளங்கதி ரோனென என்னு ளிருளறுக்கும்
மாமோக மாற்றும் மதிளத்தி யூரின் மரகதமே. 12

கத்தித் திரியுங் கலைகளை வெல்லும் கருத்தில்வைத்துப்
பத்திக் குறுதுணை பன்னிரு நாமம் பயில்பவர்க்கு
முத்திக்கு மூல மெனவே மொழிந்தஇம் மூன்று நான்கும்
தித்திக்கு மெங்கள் திருவத்தி யூரரைச் சேர்பவர்க்கே. 13

பன்னிருநாமம் முற்றிற்று.

**சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்**

**ஸ்ரீ பெரியாழ்வார் திருவடிகளே சரணம்**

கண்ணார்கடல்சூ ழிலங்கைக்கிறைவன்றன்,
திண்ணாகம்பிளக்கச் சரஞ்செலவுய்த்தாய்,
விண்ணோர்தொழும் வேங்கடமாமலைமேய
அண்ணா, அடியேனிடரைக்களையாயே.

—பெரிய திருமொழி 1—10 1.

**ஸ்ரீ திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்**



திருவஹீந்திரபுரத்தில் ஸேவை ஸாதிக்கும் ஸ்ரீ ஹேமாப்ஜ நாயகித் தாயார்.

பக்தர்களுக்கு அனுக்ரஹம் செய்வதொன்றன்றி வேறறியாள் இப்பிராட்டி.

# ஸ்ரீ மஹாலக்ஷ்மி கவசம்

[ஸ்ரீ பாஞ்சராத்ர லக்ஷ்மீ தந்த்ரத்தில் ப்ருகுஸம்ஹிதையில் உள்ள ஸ்தோத்ரம். ஸர்வ ஸித்தி ப்ரதம் எல்லாக் கவசங்களிலும் மிகச் சிறந்தது, நலம் திகழ் நிறை நான்முகன், ப்ருஹஸ்பதி மூலம், தாமரைத் தண்டிலிருந்து நொந்து வருந்திய இந்திரனுக்கு உபதேசிக்க, அவன் துயர்நீங்கி வலிமை பெற்று அசுவமேதம் செய்து தேவாதிகாரம் மீண்டும் எய்தி விளங்கினான்.]

ஹரி: ஓம் — அஸ்ய ஸ்ரீ மஹாலக்ஷ்மீ கவச ஸ்தோத்ர மஹா மந்த்ரஸ்ய — ஸ்ரீ ப்ரஹ்மா ருஷி :— அநுஷ்டுப் சந்த :— ஸ்ரீ மஹா லக்ஷ்மீர்தேவதா :—ஸ்ரீம் பீஜம்—ஹ்ரீம் சக்தி :—க்லீம் கீலகம்— ஸ்ரீமஹாலக்ஷ்மீ ப்ரஸாத ஸித்த்யர்த்தே ஸ்ரீ மஹாலக்ஷ்மீ கவசஸ்தவ பாராயணே விநியோக: |

## த்யாநம்

அருணநளிந ஸம்ஸ்தா
  தத்ரஜ : புஞ்ஜவர்ணா
கரகமல த்ருதேஷ்டா
  பீதியுக்மாம்புஜா ச |
மணிமகுட விசித்ரா-
  லங்க்ருதா கல்பபுஷ்பை :
பவது புவநமாதா
  ஸந்ததம் ஸ்ரீ ஶ்ரியை ந :

## ஓம்

1. விஷ்ணுபத்நீ ஶிர : பாது
  லலாடம் அம்ருதோத்பவா |
சக்ஷுஷீ ச விஶாலாக்ஷீ
  ஶ்ரவணே ஸாகராத்மஜா ||

2. க்ராணம் பாது வராரோஹா
  ஜிஹ்வாம் பாது ஸ்வரூபிணீ
முகம் பாது மஹாலக்ஷ்மீ :
  கண்டம் வைகுண்டவாஸிநீ ||

நளௌ து ஜாநக் பாது
புஜௌ பார்கவ நந்திநீ |
ப்ரகோஷ்டௌ ருக்மிணீ பாது
கரௌ ஹரிவராஹிணீ ||

4. வக்ஷஸ்ச பாது ஸ்ரீ தேவீ
ஹ்ருதயம் ஹரி ஸுந்தரீ |
குக்ஷிம்ச வைஷ்ணவீ பாது
நாபிம் புவந மாத்ருகா ||

5. கடிம் மே பாது வாராஹீ
குஹ்யம் மே தேவதேவிகா
ஊரூ நாராயணீ பாது
ஜாநுநீ சந்த்ரஸோதரீ ||

6. இந்திரா பாது ஜங்கே மே
பாதௌ பக்தஜநப்ரியா |
மஹா தேஜஸ்விநீ பாது
ஸர்வாங்கம் கருணாலயா ||

பலஶ்ருதி

1. ஸமஸ்த கவசாநாம் து
லக்ஷ்மீகவச முத்தமம் |
சதுர்தஶஸு லோகேஷு
ப்ரஹ்மணா நிர்மிதம் புரா ||

2. ஸர்வபாபஹரம் திவ்யம்
ஸர்வாபீஷ்ட பலப்ரதம் |
யே பஜந்தி ஜநா: ஸர்வே
தேஷாம் இஷ்டப்ரதோ ஹரி:





நவஹீந்திர புரத்தில் திவ்ய ஸேவை தந்தருளும் அடியவர்க்கு
மெய்யனான ஸ்ரீதேவநாதன்

பயின்மதி நீயே பயின்மதி தருதலின்
வெளியு நீயே வெளியுற நிற்றலின்
தாயு நீயே சாயைதந் துகத்தலின்
தந்தையு நீயே முந்திநின் றளித்தலின்
உறவு நீயே துறவா தொழிதலின்
உற்றது நீயே சிற்றின்ப மின்மையின்
ஆறு நீயே யாற்றுக் கருள்தலின்
அறமு நீயே மறநிலை மாய்த்தலின்
துணைவனு நீயே யிணையிலை யாதலின்

துய்யனு நீயே செய்யா ளுறைதலின்
காரண நீயே நாரண னுதலின்
கற்பக நீயே நற்பதந் தருதலின்
இறைவனு நீயே குறையொன் றிலாமையின்
இன்பமு நீயே துன்பந் துடைத்தலின்
யானு நீயே யென்னு ளுறைதலின்
எனது நீயே யுனதன்றி யின்மையின்
நல்லாய் நீயே பொல்லாங் கிலாமையின்
வல்லாய் நீயே வையமுண் டுமிழ்தலின்
எங்ஙன மாகு மெய்யநின் வியப்பே
அங்ஙனே யொக்க அறிவதா ரணமே.

— மும்மணிக் கோவை

**சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்**

நம்பனே நவின்றேத்தவல்லார்கள் நாதனே நரசிங்கமதானாய்,
உம்பர் கோனுல கேழுமளந்தாய் ஊழியாயினாய் ஆழிமுன்
னேந்தி,
கம்பமாகரிகோள் விடுத்தானே காரணாகடலைக் கடைந்தானே,
எம்பிரானென்னை யாளுடைத்தேனே யேழை யேனிடரைக்
களையாயே.

— பெரியாழ்வார் திருமொழி 5—1—9

**ஸ்ரீ பெரியாழ்வார் திருவடிகளே சரணம்**



காஞ்சீபுரத்தில் அத்திகிரி என்னும் சிறுகுன்றின்மீது எழுந்தருளி
நக்கும் ப்ரணதார்த்திஹரனை ஸ்ரீ தேவராஜப் பெருமாள்.
கா வரதராஜன் என ஸகலராலும் போற்றப்படுபவன்.

பத்திமுத லாமவற்றில் பதியெனக்குக் கூடாமல்
எத்திசையும் உழன்றோடி இளைத்துவிழுங் காகம்போல்
முத்திதரு நகரேழில்முக்கியமாங் கச்சிதனில்
அத்திகிரி யருளாளர்க்கு அடைக்கலநான் புகுந்தேனே.

அடைக்கலப் பத்து

# SIGNIFICANCE OF UPAKARMA

## Worship of Lord Hayagreeva

*by*

Sri Ubhayave. V. VEERARAGHAVACHARY

Sri Hayagreeva is an incarnation of Lord Vishnu, who is Gyana and Ananda personified, whose complexion is clear white and who is the root cause of all arts and sciences.

Brahma had lost his encyclopaedia, the Vedas, when he was in slumber and though the Kalpa had started, he could not commence his assigned duty of creation. So he took to yoga concentrating on Sreeman Narayana, the originator, who, in Hayagreeva form, killed the demons Madhu and Kaitaba, who had stolen the Vedas from Brahma. Assuming the horse-headed form, he recited the entire Vedas for the benefit of Brahma to go on with his function of creation. This incident was narrated by Brahma himself to sage Narada and is recorded in the Bhagavatham.

Lord Hayagreeva is VACHAM NIDHI, Lord of all that could originate from the mouth, and the learned ones like Sri Dakshinamoorthy, Brahma and his consort Saraswathi, Vyasa, Parasara, Valmiki and so on owe their greatness to Him. He who concentrates his mind on the Lord of Learning is bestowed with knowledge and it flows to him without any obstruction like the flow of Mother Ganga.

SOURCE OF ALL KNOWLEDGE: He is ever present with Sanka and Chakra in two of His hands, the third holding the book of knowledge and the fourth is an explanatory posture, ever ready to shower His grace. He is Yogeswara as well as Vageeswara.

Sri Ramanuja acquired from Goddess Saraswathi at Srinagar, the Hayagreeva Mantra along with an icon of Sri Hayagreeva and the Brahma Sutras with annotations. He developed them in his Sri Bashya and it spread to posterity through his line of disciples. Sri Desika in this line acquired them.

**He performed Upasana of the Hayagreeva Mantra on a hilloc on the banks of the Garuda Nadhi, which empties itself into tl ocean near Cuddalore, and obtained perfection. This site i Tiruvaheendirapuram has a Temple dedicated to Sri Hayagreeva.**

The utsava idol of Lord Hayagreeva in his possession hε become the presiding deity of the Mutt at Mysore and wε worshipped by Sri Parakala Swami, the Raja Guru of the Rule there.

The day on which Sri Hayagreeva appeared with the Vedas before Brahma is celebrated throughout the length and breadth of Bharata Varsha as Upakarma or Raksha Bandan, on which day the sacred thread is renewed and practice of the Vedas is commenced.

—With grateful acknowledgments to " The Hindu '

dated 22—8—1964.

வ்யாக்யா முத்ராம் கரஸரஸிஜை: புஸ்தகம் சங்க சக்ரே
பிப்ரத் பிந்நஸ்படிகருசிரே புண்டரீகே நிஷண்ண: |
அம்லாந ஸ்ரீரம்ருதவிசதை: அம்சுபி: ப்லாவயந்மாம்
ஆவிர்ப்பூயா தநகமஹிமா மாநஸே வாகதீச: ||

—ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன்

# ஸ்ரீஹயக்ரீவாஷ்டோத்தரம்

ஹயக்ரீவோ மஹாவிஷ்ணு : கேசவோ மதுஸூதந : |
கோவிந்த : புண்டரீகாக்ஷோ விஷ்ணுர் விச்வம்பரோ ஹரி : || (1)

ஆதித்யஸ் ஸர்வவாகீச : ஸர்வாதாரஸ் ஸநாதந : |
நிராதாரோ நிராகாரோ நிரீசோ நிருபத்ரவ : || (2)

நிரஞ்ஜநோ நிஷ்களங்கோ நித்யத்ருப்தோ நிராமய : |
சிதாநந்தமயஸ் ஸாக்ஷீ சரண்ய : ஸர்வதாயக : || (3)

ஸ்ரீமாந் லோகத்ரயாதீச : சிவஸ் ஸாரஸ்வதப்ரத : |
வேதோத்தர்த்தா வேதநிதி : வேதவேத்ய : ப்ரபூதந : || (4)

பூர்ண : பூரயிதா புண்ய : புண்யகீர்த்தி : பராத்பர : |
பரமாத்மா பரம் ஜ்யோதி : பரேச : பாரக : பர : || (5)

ஸர்வவேதாத்மகோ வித்வாந் வேதவேதாந்த பாரக : |
ஸகலோபநிஷத் வேத்யோ நிஷ்களஸ் ஸர்வ சாஸ்த்ரக்ருத் || (6)

அக்ஷமாலா ஜ்ஞாநமுத்ரா யுக்தஹஸ்தோ வரப்ரத : |
புராணபுருஷ : ச்ரேஷ்ட : சரண்ய : பரமேச்வர : || (7)

சாந்தோ தாந்தோ ஜிதக்ரோதோ ஜிதாமித்ரோ ஜகந்மய : |
ஜந்ம ம்ருத்யுஹரோ ஜீவோ ஜயதோ ஜாட்யநாசந : || (8)

ஜபப்ரியோ ஜபஸ்துத்யோ ஜாபகப்ரியக்ருத் ப்ரபு : |
விமலோ விச்வரூபஸ்ச விச்வகோப்தா விதிஸ்துத : || (9)

விதீந்த்ரசிவஸம்ஸ்துத்ய : சாந்தித : க்ஷாந்திபாரக : |
ச்ரேய : ப்ரத : ச்ருதிமய : ச்ரேயஸாம் பதிரீச்வர : || (10)

அச்யுதோநந்த ரூபஸ்ச ப்ராணத : ப்ருதிவீபதி : |
அவ்யக்தோ வ்யக்தரூபஸ்ச ஸர்வஸாக்ஷீ தமோஹர : || (11)

அஜ்ஞாந நாசகோ ஜ்ஞாநீ பூர்ணசந்த்ர ஸமப்ரப : |
ஜ்ஞாநதோ வாக்பதிர் யோகீ யோகீசஸ் ஸர்வகாமத : || (12)

மஹாயோகீ மஹாமௌநீ மௌநீச : ச்ரேயஸாம்நிதி : |
ஹம்ஸ : பரமஹம்ஸஸ்ச விச்வகோப்தா விராட் ஸ்வராட் || (13)

சுத்தஸ்படிக ஸங்காசோ ஜடாமண்டல ஸம்யுத : |
ஆதிமத்யாந்த ரஹித : ஸர்வவாகீச்வரேச்வர : || (14)

பலச்ருதி

நாம்நா மஷ்டோத்தரசதம் ஹயக்ரீவஸ்ய ய : படேத் |
வேத வேதாங்க வேதாந்த சாஸ்த்ராணாம் பாரக : கவி : || (15)

வாசஸ்பதி ஸமோ புத்த்யா ஸர்வவித்யா விசாரத : |
மஹைச்வர்ய மாஸாத்ய களத்ராணி ச புத்ரகாந் || (16)

அவாப்ய ஸகலாந் போகாநந்தே ஹரிபதம் வ்ரஜேத் ||

இதி ஸ்ரீபராசர புராணே, அகஸ்த்யநாரத
ஸம்வாதே, ஹயக்ரீவாஷ்டோத்தர
சதநாம ஸ்தோத்ரம்
ஸம்பூர்ணம்.

# ஸ்ரீஹயக்ரீவாஷ்டோத்தர சத நாமாவளி

(இந்த நாமாக்களுக்கு முன்னால் 'ஓம்' என்றும், பின்னால் 'நம:' என்றும் சேர்த்துக்கொள்ளவும்.)

1. ஹயக்ரீவாய 2. மஹாவிஷ்ணவே 3. கேசவாய 4. மது ஸூதநாய 5. கோவிந்தாய 6. புண்டரீகாக்ஷாய 7. விஷ்ணவே 8. விச்வம்பராய 9. ஹரயே 10. ஆதித்யாய 11. ஸர்வவாகீசாய 12. ஸர்வாதாராய 13. ஸநாதநாய 14. நிராதாராய 15. நிராகாராய 16. நிரீசாய 17. நிருபத்ரவாய 18. நிரஞ்ஜநாய 19. நிஷ்களங்காய 20. நித்யத்ருப்தாய 21. நிராமயாய 22. சிதாநந்தமயாய 23. ஸாக்ஷிணே 24. சரண்யாய 25. ஸர்வதாயகாய 26. ஸ்ரீமதே 27. லோகத்ரயாதீசாய 28. சிவாய 29. ஸாரஸ்வதப்ரதாய 30. வேதோத்தர்த்ரே 31. வேதநிதயே 32. வேதவேத்யாய 33. ப்ரபுதநாய 34. பூர்ணாய 35. பூரயித்ரே 36. புண்யாய 37. புண்யகீர்த்தயே 38. பராத்பரஸ்மை 39. பரமாத்மநே 40. பரஸ்மை ஜ்யோதிஷே 41. பரேசாய 42. பாரகாய 43. பரஸ்மை 44. ஸர்வவேதாத்மகாய 45. விதுஷே 46. வேதவேதாந்த பாரகாய 47. ஸகலோபநிஷத் வேத்யாய 48. நிஷ்களாய 49. ஸர்வசாஸ்த்ரக்ருதே 50. அக்ஷமாலா ஜ்ஞாநமுத்ரா யுக்தஹஸ்தாய 51. வரப்ரதாய 52. புராண புருஷாய 53. ச்ரேஷ்டாய 54. சரண்யாய 55. பரமேச்வராய 56. சாந்தாய 57. தாந்தாய 58. ஜிதக்ரோதாய 59. ஜிதாமித்ராய 60. ஜகந்மயாய 61. ஜந்மம்ருத்யுஹராய 62. ஜீவாய 63. ஜயதாய 64. ஜாட்யநாசநாய 65. ஜபப்ரியாய 66. ஜபஸ்துத்யாய 67. ஜாபக ப்ரியக்ருதே 68. ப்ரபவே 69. விமலாய 70. விச்வ ரூபாய 71. விச்வகோப்த்ரே 72. விதிஸ்துதாய 73. விதீந்த்ரசிவ ஸம்ஸ்துத்யாய 74. சாந்திதாய. 75. க்ஷாந்தி பாரகாய 76. ச்ரேய: ப்ரதாய 77. ச்ருதிமயாய 78. ச்ரேயஸாம் பதயே 79. ஈச்வராய 80. அச்யுதாய 81. அநந்த ரூபாய 82. ப்ராணதாய 83. ப்ருதிவீபதயே 84. அவ்யக்தாய 85. வ்யக்த ரூபாய 86. ஸர்வஸாக்ஷிணே 87. தமோஹராய 88. அஜ்ஞாந நாசகாய 89. ஜ்ஞாநிநே 90. பூர்ண சந்த்ரஸமப்ரபாய 91. ஜ்ஞாநதாய 92. வாக்பதயே 93. யோகிநே. 94. யோகீசாய 95. ஸர்வ காமதாய 96. மஹாயோகிநே 97. மஹாமௌநிநே 98. மௌநீசாய 99. ச்ரேயஸாம் நிதயே 100. ஹம்ஸாய 101. பரமஹம்ஸாய 102. விச்வகோப்த்ரே 103. விராஜே 104. ஸ்வராஜே 105. சுத்தஸ்படிக ஸங்காசாய 1(6. ஜடாமண்டல ஸம்யுதாய 107. ஆதிமத்யாந்த ரஹிதாய 108. ஸர்வவாகீச்வரேச்வராய.

**ஸ்ரீ ஹயக்ரீவாஷ்டோத்தர சத நாமாவளி: ஸமாப்தா.**

## திருவஹீந்திரபுரம் ஔஷதகிரியில் ஸேவை ஸாதிக்கும்



ஸ்ரீ வேணுகோபாலன் | ஸ்ரீ ல[illegible] ஹயக்ரீவன் | கருடபகவான்



His Holiness Srimad Abhinava Ranganatha Brahmatantra Swatantra Parakala Yatindra Mahadesika of Sri Parakala Mutt, Mysore.

*Block by courtesy:—*
The Bharatiya Vidya Bhavan,
Bombay.

# HIS HOLINESS
# SRI JEER OF SRI PARAKALA MUTT, MYSORE

HIS HOLINESS SRIMAD ABHINAVA RANGANATHA BRAHMATANTRA SWANTANTRA PARAKALA YATINDRA MAHA DESIKA (the present Jeer Swami of Sri Parakala Mutt, Mysore) is considered as God in human form and as the spiritual descendant of Sriman Nigamantha Maha Desika, the Great Vaishnava Acharya. We have great pleasure in reproducing an article about this GREAT SAINT, that appeared in the Bhavan's Journal dated 30-8-64 :

"SRI PARAKALA SWAMIJI"

The eightieth birthday of His Holiness Sri Parakala Swamiji of Sri Bramhatantra Parakala Mutt, Mysore, was celebrated on August 6, 1964.

The Mutt was founded by Sri Bramhatantra Swamiji (1286 to 1386 A.D.), who was the chief disciple of Sri Vedanta Desikar (1268 - 1370 A.D.) a great exponent of Vishistadvaita philosophy. The presiding deity of the Mutt is Sri Lakshmi Hayagriva, which was worshipped by Bhagavad Ramanuja and Sri Vedanta Desikar.

During the time of H. H. Sri Periya Parakala Swamiji (1676-1737 A.D.) who was the 21st Acharya of the Mutt, the headquarters of the Mutt were shifted from Tirupati to Srirangapatna and subsequently to Mysore under the supervision of His Highness Sri Dodda Krishnaraja Wadiyar, the then Maharaja of Mysore. Since then, Yathivaryas have been the Kulagurus of the Royal Family of Mysore.

His Holiness Sri Parakala Swamiji became the thirty-third Yathivarya in 1925. Since then, he has guided the activities of the Mutt with great dignity and success. He has travelled all over India. Eminent men like the late Pandit Malaviyaji, Dr. Rajendra Prasad and the German Theologian Rudolf Otto had come to him for spiritual enlightenment. Swamiji is a profound scholar and author of many works like **Gudhartha Sangraha and Upanishatsara.**"

— With grateful acknowledgments to the "Bhavan's Journal"

dated 30-8-1964.

## பாகவதாளின் பாததூளியின் பெருமை



பூதமைந்தொடு வேள்வியைந்து
  புலன்களைந்து பொறிகளால்
ஏதமொன்றுமில் லாதவண்கையி
  ஞர்கள்வாழ்திருக் கோட்டியூர்,
நாதனைநர சிங்கனைநவின்
  றேத்துவார்க ளுழக்கிய
பாததூளி படுதலாலிவ்
  வுலகம்பாக்கியம் செய்ததே.

— பெரியாழ்வார் திருமொழி 4—4—6

ஸ்ரீ பெரியாழ்வாரின் அருளிச்செயலான மேற்கண்ட பாசுரத்திலிருந்து, பாகவதோத்தமர்களுடைய பாததூளிகள் நமக்கு ஒரு பெரிய ரக்ஷையாய் விளங்கி வருவது புலனுகும்.

"பகவத்பக்தர்களுடைய பாததூளிகளை நம்முடம்பில் பூசிக் கொள்ளும்படியான பேறு கிடைத்தால், கங்காநதியில் ஸ்நானம் பண்ணும்படியான ஆசையே வேண்டா. (எனவே) பகவானுடைய அவதாரங்களையும் அவ்வவதாரங்களில் அவன் செய்த வீரச்செயல் களையும் சொல்லிப் பாடிப் போற்றிக் கண்ணீர் பெருகி நிற்கும் பகவானின் அடியார்களது திருவடிச்சேற்றை என் தலையில் பூசிக் கொள்கிறேன்," என்று பெருமாள் திருமொழியில் (2-ஆம் திருமொழி) 2-வது 3 வது பாசுரங்களில்) ஸ்ரீகுலசேகராழ்வார் ஸாதித்திருக்கிருர்.

ஸ்ரீமந் நிகமாந்த தேசிகன் ஸ்ரீ பாதுகா ஸஹஸ்ரம் என்கிற திவ்ய கிரந்தத்தில் முதலாவது சுலோகத்தில் பின்வருமாறு அருளிச்செய் திருக்கிருர் :—

"ஸ்ரீ ரங்கநாதன் பாதுகைகளைப் பரம ஸந்தோஷத்துடன் சிரஸில் வைத்துக்கொள்கிற பெரியோர்களுடைய திருவடித் தூள்கள் எல்லா லோகத்தையும் காப்பாற்றுகின்றன. அப்பேர்ப்பட்ட பெரியோர்கள் மிகவும் உயர்ந்தவர்களாயிருக்கிருர்கள்."

நாம் திருப்பதி போன்ற திவ்ய தேசங்களுக்கு யாத்திரை போனுல் கோயில் ப்ராகாரத்தில் அங்கப்ரதக்ஷிணம் செய்கிருேம். இதில் அடங்கியுள்ள தத்துவமாவது, பகவானை ஸேவிப்பதற்காக வந்த லக்ஷக்கணக்கான பாகவதர்களுடைய பாததூளிகள் அப்பிராகாரமெங்கும் உதிர்ந்திருக்குமாதலால், அந்தப் ப்ராகாரத்தில் பகவந் நாமாவைச் சொல்லிக் கொண்டு விழுந்து புரண்டு அங்கப்ரதக்ஷிணம் செய்வதால் அப்பாத தூளிகள் நம் உடம்பில் பட்டு நமது உடலுக்கும் உள்ளத்துக்கும் தூய்மையளித்துப் புனிதப்படுத்தும் என்பதே.

இத்தகைய புனிதத் தன்மை வாய்ந்த பகவத் பாததூளிகளால் பயனடைய இன்னொரு வழியையும் பின்பற்றலாம். பக்தர்கள் திருமலை போன்ற திவ்ய தேசங்களுக்கு யாத்திரையாகவோ அல்லது கங்கை, காவிரி திரிவேணி பெண்ணை, கடிலம், ஸங்கமம் போன்ற புண்ணிய நதிகளில் ஸ்நானம் செய்யவோ செல்லும் ஸமயம் அந்தத் திவ்யதேசம் அல்லது திவ்ய தீர்த்தங்கள், தவிர திவ்ய தீர்த்தங்கள் அருகில் உள்ள பாகவத பாததூளியினால் புனிதப்படுத்தப்பட்ட மண்ணை, பக்தியுடன் சுத்தமான பாத்திரம் அல்லது வஸ்திரத்தில் சிறிதளவு பக்தி சிரத்தை யுடன் சேகரித்துத் தம்முடன் எடுத்து வந்து தம் க்ருஹங்களில் வைத்துக் கொள்ளலாம். அவைகள் வீட்டில் இருப்பதே ஒரு பெரு ரக்ஷையாகும்.

மேலும், நாம் தினந்தோறும் திருமண் காப்பு அணியும்போதும் ஸந்த்யா வந்தநம் முதலிய நித்ய கர்மானுஷ்டானங்களைச் செய்யும் போதும் அவைகளைச் சிறிதளவு (முறையே திருமண் காப்புடனும் தீர்த்தத்துடனும்) கலந்து உபயோகிக்கலாம்.

மனம் நிம்மதி இல்லாமல் இருக்கும் போது அவைகளைச் சிறிது எடுத்துத் தலையில் தெளித்துக்கொண்டு பகவானைப் பிரார்த்தித்தால் மனச்சாந்தி ஏற்படும்.

வீடு முதலியவைகள் கட்டும்போது, அஸ்திவாரத்தில் அதைச் சிறிதளவு சேர்த்தும், வீட்டில் நம் கால் படாத பாகங்களுக்கு மேல் பூச்சுப் பூசும் சிமெண்ட் முதலியவைகளுடன் சிறிதளவு கலந்தும் உபயோகிக்கலாம்.

ஹோமம் யஜ்ஞம் முதலிய வைதிக கர்மாக்கள் செய்யும் ஸமயம், ஹோம குண்டம் அல்லது யாகசாலை அமைப்பதற்கு இத்தகைய புனிதத் தன்மை வாய்ந்த மண்ணையும் சிறிது கலந்து உபயோ கிக்கலாம். விவாஹ ஸமயங்களில் பாலிகைகளில் சேர்க்கலாம்.

சுருங்கக்கூறின் நாம் பூர்வாசாரியர்கள் யாவராலும் ஒரு முகமாகப் போற்றப்பட்டிருக்கும் பாகவத பாததூளிகளின் மஹிமையை பூர்ணமாக உணர்ந்து மேற்கண்ட விதமாகப் பக்தியுடனும் நம்பிக்கை யுடனும் உபயோகித்து வந்தால், நமக்கு ஸகலவிதமான ச்ரேயஸ்ஸும் மங்களமும் ஏற்படுவது திண்ணம்.

**ஸ்ரீ குலசேகராழ்வார் திருவடிகளே சரணம்!**

**ஸ்ரீ பெரியாழ்வார் திருவடிகளே சரணம்!**

**ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளே சரணம்!**

**ஸ்ரீ நம்மாழ்வார் திருவடிகளே சரணம்!**

**சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான்**
**திருவடிகளே சரணம்!**

**ஸ்ரீ ரங்கநாத திவ்யமணி பாதுகாப்யாம் நம:**



# திருமண் இட்டுக்கொள்வதன் அவசியம்

எண்பத்து நான்கு லக்ஷம் வகை ஜீவராசிகளில் மனுஷ்ய சரீரம் கிடைப்பதரிது அத்தகைய கிடைத்தற்கரிய மனுஷ்ய சரீரம், பகவான் வாழும் திருக்கோயிலாகும். அதிலும் 'ஹ்ருதயம்' என்னும் மார்பகமே அவனுடைய கர்ப்பக்கிருஹம்.

"ஹ்ருதயம் தத் விஜாநீயாத் விச்வஸ்யாயதநம் மஹத்"— ஹ்ருதயத்தை எங்கும் பரந்துள்ள எம்பெருமானின் இருப்பிடமாக அறிந்துகொள்," என்கிறது புருஷ ஸூக்தம்.

மற்றும், தைத்திரீய ஆரண்யகம் முதல் ப்ரச்னத்தில்—

"அஷ்டா சக்ரா நவத்வாரா
தேவாநாம் பூ: அயோத்யா |
தஸ்யாப் ஹிரண்மய: கோச:
ஸ்வர்கோ லோகோ ஜ்யோதிஷாவ்ருத:
யோவை தாம் ப்ரஹ்மணோ வேத
அம்ருதே நாவ்ருதாம் புரீம் |
தஸ்மை ப்ரஹ்மச ப்ரஹ்மாச
ஆயு: கீர்த்திம் ப்ரஜாம் தது:"

என்ற விருத்தாந்தம் சொல்கிறது.

"எண் வகைத் தோல்களும், ஒன்பது த்வாரங்களும் கொண்ட இந்தச் சரீரத்தில் பரமாத்மா வசிப்பதற்குத் தங்க மயமான பட்டண மாக அமைந்தது மார்பகம். அதைப் பகவானின் திருக்கோயிலாக எண்ணி, பகவானைத் தியானிப்பவர்களுக்குப் பரப்ரஹ்மமும், ப்ரஹ்மா வும் ஆயுள், கீர்த்தி, சந்ததி, சம்பத்து முதலியவைகளை அளிப்பர்.

இதையே திருமங்கையாழ்வாரும் —

"ஊனிடைச் சுவர்வைத்து, என்புதூண் நாட்டி,
உரோமம்வேய்ந்து, ஒன்பது வாசல்

தானுடைக் குரம்பை பிரியும்போது உன்றன்
சரணமே சரணம்என் றிருந்தேன்."

என்று அருளிச் செய்துள்ளார்.

ஆகவே, எம்பெருமான் இந்தச் சரீரமாகிற திருக்கோயிலிலே வாஸம் பண்ணுகிறார் என்பதைக் குறிப்பிடவே எம்பெருமானின் திருவடி வடிவில் அமைந்த திருமண் காப்பை ஸ்ரீவைஷ்ணவர்கள் பன்னிரண்டு இடங்களில் தரித்துக்கொள்கின்றார்கள். அவைகளுக்கு 'த்வாதச நாமங்கள்' அல்லது 'பன்னிரு நாமங்கள்' என்பது பெயர்.

உபநயனம் ஆகித் தம்தம் ஆசாரியரிடத்தில் ஸமாச்ரயனம் செய்துகொண்ட ஒவ்வொரு ஸ்ரீ வைஷ்ணவரும் **தினந்தோறும்** பன்னிரு நாமங்களைத் தரித்துக்கொண்டு, முறைப்படி அந்தந்த இடத்தில் பகவானுடைய பன்னிரு நாமங்களையும், மஹாலக்ஷ்மியி னுடைய பன்னிரு நாமங்களையும் உச்சரித்து ஆவாஹனம் செய்ய வேண்டும்.

இதை மற்றொரு லௌகிக முறையிலும் சொல்லலாம். அதாவது, பகவானுடைய கோயில் கோபுர வாசல் முன் புறத்தில் தினந்தோறும் வெண்ணிறமான மாவினுலோ வர்ணப்பொடிகளாலோ கோலங்கள் போடுவதை நாம் பார்க்கிறோம். அம்மாதிரியே இந்தச் சரீரமாகிற பகவான் திருக்கோயிலுக்குக் கோலமிடுவது சாலவும் நன்றன்றோ! தன் உடல் பகவானின் திருக்கோயில் என்னும் உண்மையையறிந்தவன் எவனோ, அவன் பன்னிரு நாமங்களை இட்டுக்கொள்ள வெட்கப் படவே மாட்டான் என்பது உறுதி.

## நெற்றித்திருமண்

'நெற்றி' என்பது உள்ளத் தூய்மையை வெளிக் காட்டும் பளிங்குக் கண்ணாடி. (The face is the mirror of the heart.) ஒருவன் பக்தனா, நாஸ்திகனா, புத்திசாலியா, மூடனா என்பது முகத்தைப் பார்த்தாலே விளங்கி விடும். ஆகவே, ஹ்ருதயத்தில் குடி கொண்டுள்ள பகவான் நெற்றியில் பிரதிபலிக்கிறார். அதை ஞாபகப்படுத்துவதற் காகவே நெற்றியில் 'பளிச்'சென்று பகவத் பாதாக்ருதியான திருமண் இட்டுக்கொள்வது மிகமிக அவசியம். பன்னிரு நாமங்களில் 'கேசவன்' என்னும் சொல்லால் வழங்கப்படும் முதல் திருமண் நெற்றித் திரு மண்ணாகும். ஆகவே, பன்னிரு நாமங்களைத் தரிக்க அவகாசமோ சௌகரியமோ இல்லாத ஸ்ரீ வைஷ்ணவர்கள் நெற்றித் திருமண்ணை யாவது இட்டுக்கொள்வது மிகவும் அவசியம்.

திருமண் இல்லாத நெற்றிப் 'பாழ் நெற்றி' என்று வழங்கப் படுகிறது. பாழ் நெற்றி மூதேவியின் இருப்பிடமாகும்.

க்ருஷ்ண யஜுர் வேதம் 41-ஆவது காண்டம் 2-ஆவது ப்ரச்னத் தில் சொல்வதாவது :—

> **"மனிதர்களின் கழுத்துக்குமேல் நிருருதி தேவி (மூதேவி) சுற்றிக்கொண்டிருக்கிறாள். அவளைச் சில மந்திரங்களைச் சொல்லி ஹோமம் செய்து விடுவிக்கிறேன். அவளிடமிருந்து விடுபட்டு மனிதன் தீர்க்காயுளுடன் வாழ வேண்டும்."**

அவ்வாறே தைத்திரியப்ராஹ்மணம் 2-ஆவது அஷ்டகம் முதல் ப்ரச்னத்தில் ஒரு விருத்தாந்தம் சொல்வதாவது :—

"ஒருசமயம் ப்ரஹ்மா அக்னிமீது கோபம் கொண்டு அவனைத் துரத்திக்கொண்டு ஓடினார். ஆனால், அவனைப் பிடிக்க முடிய வில்லை. அவர் களைப்புற்றிருப்பதைக் கண்ட அக்னி தேவன் தானே நின்றுவிட்டான். வெகுதூரம் ஓடியதால் பிரம்மா வுக்கு நெற்றியில் வியர்த்துவிட்டிருந்தது. அவர் அதைத் துடைத்தார். வியர்வையை வழிக்கும் போது நெற்றியில் இருந்த ரோமங்களையும் வழித்துப் போட்டார். அதனால்தான் அவரால் படைக்கப்பட்ட நமக்கும் நெற்றியில் உரோமங்கள் இல்லை. அவர் அவ்வாறு வழித்துப் போட்ட ரோமங்களே மூதேவியாகும்."

ஆகவே, மூதேவியின் முன்னிடமான நெற்றியில் பகவானுடைய திருவடிச்சின்னமான திருமண்ணையும், மஹாலக்ஷ்மியின் சின்னமான ஸ்ரீசூர்ணத்தையும் தரித்தால் மூதேவி எட்டியும் பார்க்கமாட்டாள். அவ்வாறன்றி, பாழ், நெற்றியாக விட்டிருந்தால், மூதேவி வாழ, விரும்புவாள் என்பதைச் சொல்லவும் வேண்டுமா! மேலும், "ஜபதான ஹோமாதி கர்மாக்களும் ஸந்த்யா .வந்தனம் முதலிய நித்ய கர்மாக் களும் ஊர்த்வ புண்டரம் (திருமண் காப்பு) இல்லாமல் செய்யப்பட்டால் ஸர்வம் நிஷ்பலமாகிவிடும். இந்தச் சரீரம் ஸ்மசானதுல்யம்" என ப்ருகு ஸம்ஹிதையில் சொல்லியிருப்பதாக ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் ஸாதித் துள்ளார்.

## திருமண் மகிமை

'திருமண்' என்பது வெறும்மண் அல்ல. திருக்கலந்த-ஸத்வ குணம் நிறைந்த-லக்ஷ்மீகரமான மண். இந்த அபிப்ராயத்தைத் திருமண் இடும் மந்திரம் விளக்குகிறது பாருங்கள்:

உத்ருதாஸி வராஹேண
க்ருஷ்ணேந சதபாஹுநா |
பூமிர் தேநுர் தரணீ லோகதாத்ரீ
ம்ருத்திகே ஹந மே பாபம்
யந்மயா துஷ்க்ருதம் க்ருதம் |
த்வயா ஹதேந பாபேந
ஜீவாமி சரதச்சதம் |
ம்ருத்திகே தேஹி மே புஷ்டிம்
த்வயி ஸர்வம் ப்ரதிஷ்டிதம் |

"ச்வேத வராஹ ரூபியான பகவானாலே எடுக்கப்பட்ட வெள்ளை மண் விஷ்ணுஸாந்நித்யம் கொண்டது. இம்மண் ஸர்வாபீஷ்டங் களையும் அளித்து உலகையே தரிக்கும் பூமிதேவி. ஓ ம்ருத்திகையே! உன்னைத் தரிப்பதால் என் பாபங்களைப் போக்கி நீடூழி வாழச் செய்ய வேண்டும். உன்னிடம் எல்லாம் நிறைந்துள்ளதன்றோ!"

## ஸ்ரீசூர்ண மஹிமை

திருமண் பகவானையும், ஸ்ரீசூர்ணம் தாயாரையும் குறிக்கிறது. ஸ்ரீசூர்ணம் என்ற பெயரே (ஸ்ரீ—லக்ஷ்மீகரமான+சூர்ணம்—தூள்) அதன் மகிமையைக் குறிப்பிடுவதாகும்.

அவரவர்கள் சௌகரியப்படி மஞ்சள் அல்லது சிகப்பு வர்ணத்தில் ஸ்ரீசூர்ணம் தரிக்கலாம். இவ்விரண்டு வர்ணங்களையும் பெரியவர்கள் ஆதரித்திருக்கிறார்கள்.

## திருமண்ணும்—ஸ்ரீசூர்ணமும்

ஏற்கெனவே சொன்னபடி திருமண் பகவானையும் ஸ்ரீசூர்ணம் பிராட்டியையும் குறிப்பிடுவதால், இவ்விரண்டையும் தரிப்பது எம்பிரானையும் பிராட்டியையும் காயமாகிய கோவிலில் ப்ரதிஷ்டை செய்து அந்தத் திவ்ய தம்பதிகளை உபாஸிப்பதற்கு ஒப்பாகும். எங்ஙனம் திவ்ய தம்பதிகளைப் பிரித்து, தனியாக ஒருவரைமட்டும் உபாஸிப்பது கூடாதோ, அங்ஙனமே ஸ்ரீசூர்ணத்தைமட்டும் அணிவதோ அல்லது திருமண் காப்பை மட்டும் அணிவதோ கூடாது. அப்படிச் செய்வது மஹாபாவமும் அளவற்ற அசுபமும் உண்டாக ஹேதுவாகிறது என்பது பெரியோர்களுடைய கருத்து.

பிராட்டியை மட்டும் விரும்பி ராவணாதிகளும், பெருமாளை மட்டும் விரும்பிச் சூர்ப்பணகாதிகளும் அழிந்தார்கள். இரண்டு பேரையும் சேர்த்துவைத்து வழிபட்ட விபீஷணன், ஆஞ்சநேயர் போன்றவர்கள் சிரஞ்ஜீவிகளாய் வாழ்ந்து வருகிறார்கள் என்பது முதியோர்களின் திருவாக்கு. ஆகையால், எப்போதும் திருமண்ணையும் சூர்ணத்தையும் சேர்த்தே அணிய வேண்டும். பிரிக்கக்கூடாது.

இத்திருமண் ஊர்த்வபாகமாய் அமைவதற்குக்காரணத்தை ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் தமது ஸச்சரித்ர ரக்ஷையில் வெகு அழகாய் விளக்கியிருக்கிறார்.

**"ஊர்த்வகத்யாம் ஹி யஸ்யேச்சா**
**தஸ்யோர்த்வம் புண்ட்ரமுச்யதே |**
**ஊர்த்வகத்யா ஹி தேவத்வம்**
**ப்ராப்நோதீஹ ந ஸம்சய: ||**

[எவனுக்கு உயர்ந்தகதியை (மோக்ஷத்தை) அடைவதில் விருப்பமோ அவனுக்கு ஊர்த்வபுண்ட்ரம் அவசியம் வேண்டும். உயர்ந்த (ஊர்த்வ) கதியால் நித்யஸூரிகள் போன்றதேவத்வத்தை அடைகிறான்.]

**மேலும் ஸ்வாமி ஸ்ரீ தேசிகன்,**

ஸர்ப்பம் த்ருஷ்ட்வா யதா லோகே
தர்துரா பயஸம்யுதா: |
ஊர்த்வபுண்ட்ராங்கிதம் த்த்வத்
கம்பந்தே யமகிங்கரா: ||

[பாம்பைக் கண்டவுடன் எவ்வாறு தவளைகள் பயந்து ஓடுகின்றனவோ அவ்வாறு யமபடர்கள் ஊர்த்வ புண்ட்ரங்களைக் கண்டதும் பயந்து ஓடிவிடுகிருர்கள்.]

என்று நாரதீயத்தில் இருப்பதை மேற்கோள் காட்டியிருக்கிருர். ஆகவே, பகவானின் அருளை அடைய விரும்புகிறவர்களும் ம்ருத்யு பாதையிலிருந்து விலக விரும்புகிறவர்களும் திருமண்காப்பையே மிகவும் அவசியமாக அணியவேண்டும்.

இத்திருமண் காப்பு அணியவேண்டியதன் அவசியத்தை கடசாகையும், அதர்வண வேதமும் இன்னும் பற்பல ஸ்ம்ருதி புராணுதிகளும் பரக்கப் பேசுவதை ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் ஸவிஸ்தாரமாய்த் தம் ஸச்சரித்ர ரக்ஷையில் எடுத்துக்காட்டியிருக்கிருர். விரிவிற்கு அஞ்சி அவைகள் எழுதப்படவில்லை.

ஆகவே, நெற்றியில் நித்தியப்படி திருமண் ஸ்ரீ சூர்ணங்களை நம்ரக்ஷைக்காகவும் ஸர்வமங்களார்த்தமாகவும் பளிச்சென்று தரித்து பாழ் நெற்றியை வாழும் நெற்றியாக்கி, ஸ்ரீமந் நாராயணனின் திருவருளுக்குப் பாத்திரர்களாவோமாக!

முக்கியமான தினங்களில் பன்னிரண்டு நாமங்களையும் தரித்து, ஸகல பாக்கியங்களையும் அடைய முயற்சி செய்வோமாக!

## கோயில் வழிபாட்டு முறை

எம்பெருமானுடைய திருக்கோவில்களில் பெருமாளை ஸேவிக்கச் செல்வதற்கு முந்தியும், ஸேவிக்கும்பொழுதும், சேவித்ததற்குப் பிறகும் பக்தர்கள் அனுசரிக்க வேண்டிய வழிபாட்டு முறையானது இக்காலத்தில், ஸநாதனப்பண்பாட்டு வழியில் வந்த ஒரு சிலருக்கே தெரிந்திருக்கும். லௌகிக வழியில் உள்ள பக்தர்களுக்கு இன்னது செய்யலாம் இன்னது செய்யக்கூடாதென்ற விஷயங்கள் எட்டாமலிருப்பதால், அவர்கள் சிலமுறைகளை அனுஷ்டிப்பதில்லை. ஆகவே, முற்றுமுணர்ந்த முனிவர்கள் போன்ற பெரியவர்கள் சிலரிடம்கேட்டும், ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகனின் பாஞ்சராத்ர ரக்ஷை போன்ற க்ரந்தங்களை யொட்டியும் கோயில்களில் செய்யத் தக்கவை, செய்யத் தகாதவை என்ற விஷயங்களைக் குறிப்பிட்டுள்ளோம். இத்தகைய விஷயங்கள் ஒவ்வொரு திருக்கோயில் கோபுர வாசற்படிக்கு முன்பும் கரும்பலகைகளில் எழுதப்பட்டிருந்தால், பக்தர்கள் படித்து, அவற்றின் படி நடந்து, பகவானுடைய பரிபூர்ணமான க்ருபைக்குப் பாத்திரர்களாகலாம் என்று தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

— தி லிட்டில் ப்ளவர் கம்பெனி

# I. கோயில்களில் செய்யத் தக்கவை

(*a*) **கோயிலுக்குச் செல்வதற்குமுன் :**

1. உடலைச் சுத்தம் செய்துகொண்டு ஸ்நானம் செய்.

2. சௌகரியப்படி பன்னிரு நாமங்களையோ அல்லது நெற்றித் திருமண்ணையோ தரித்துக்கொள்.

3. க்ருஹஸ்தனானால் கச்சம் வைத்து வேஷ்டியை உடுத்து.

4. சட்டைகளைக் கழற்றிவிட்டு, மேல்துண்டை இடுப்பில் கட்டு.

5. காலில் செருப்பணிந்து செல்லாதே.

6. பகவானுக்கு ஸமர்ப்பிப்பதற்காக உன் சக்திக்கேற்றவாறு நிவேதனம், கற்பூரம், வெற்றிலைப்பாக்கு, புஷ்பம் முதலியவைகளை ஒரு தட்டில் எடுத்துக்கொள்.

7. கோயில் அருகில் இருந்தால் நடந்தே செல்.

8. கோயிலுக்குச் சென்று திரும்பும் வரை ஏதாவது ஸ்தோத்திரத்தையோ அல்லது பகவந்நாமத்தையோ சொல்லிக்கொண்டு செல். சுருங்கக் கூறின், ஸதாகாலமும் பகவந்நாம ஸ்மரணம் செய்து கொண்டிருப்பது ஸகல க்ஷேமத்தையும் அளிக்கும்.

(*b*) **கோயிலுக்குள் சென்றதும் :**

1. 'புஷ்கரிணி' இருந்தால் நேராக அங்குச் செல்.

2. முதலில் புஷ்கரிணியில் காலைத் தோய்க்காதே.

3. கையில் தீர்த்தமெடுத்துத் தலையில் புரோக்ஷித்துக் கொண்ட பிறகே கைகால்களைச் சுத்தம் செய்த பிறகு ஆசமனம் செய்.

4. த்வஜ ஸ்தம்பத்திற்கெதிரில் வந்து நான்கு தடவை ஸாஷ்டாங்கமாக ஸேவித்து அனுமதி பெற்று உள்ளே செல்.

5. ஸ்வாமிஸ்ரீ தேசிகன், உடையவர், ஆழ்வார்கள், ஆசார்யர்கள் ஸந்நிதிகளில் முதலில் சேவித்து அர்ச்சனை செய்.

6. பிறகு தாயாரை ஸேவித்து அர்ச்சனை முதலியன செய்.

7. கோயிலுக்குள் பகவத் ஸந்நிதிக்கு ப்ரதக்ஷிணமாகச் செல்.

8. பிறகு, த்வாரபாலர்களை ஸேவித்துவிட்டு, பெருமாளை ஸேவித்து அர்ச்சனை, ஹாரத்தி, நிவேதனம் முதலியவைகளைச் செய்.

(*c*) **கோயிலிலிருந்து வெளியில் வரும்போது :**

1. ஸந்நிதியை மூன்று தடவைகளுக்குக் குறையாமல் பிரதக்ஷிணம் செய்.

2. கோயிலில் அமைதியான ஓர் இடத்தில் சற்று நேரம் உட்கார்.

3. உட்கார்ந்து ஸேவித்த மூர்த்திகளை வரிசையாகத் தியானம் செய்துகொள்.

4. பகவத் ப்ரஸாதங்களைச் சிந்தாமல் வைத்துக்கொள்.

5. கோயில் வெளிப்புறத்தில் ஏழை எளியவர்கள் இருந்தால் ஏதாவது தானம் செய்.

6. பக்தி மனோபாவத்துடன் வீடு சேர்.

## II. கோயில்களில் செய்யத் தகாதவை :

**(பாஞ்சராத்திர ரக்ஷை முதலிய க்ரந்தங்களிலிருந்து தொகுத்தவை)**

1. உடலை மூடிக்கொண்டு பகவானை ஸேவிப்பவன், குஷ்டரோகியாவான்.

2. நகம், மயிர், எலும்புகளை எறிபவன், ஈயாய்ப் பிறப்பான்.

3. எச்சில் துப்புபவன், நரகத்தில் சிலேஷ்மாதகமென்ற மரமாய்ப் பிறப்பான்.

4. சிறுநீர் கழிப்பவன், நரகில் தலை கீழாய் விழுவான்.

5. மலம் கழிப்பவன், மலப்புழுவாவான்.

6. தாம்பூலம் உமிழ்பவன், நாயாய்ப் பிறப்பான்.

7. கோயிலருகில் மலஜலம் கழிப்பவன், பன்றியாய்ப் பிறப்பான்.

8. கோயிலுக்குள் தூங்குபவன், நீரில்லாக் காட்டில் தனிமரமாவான்.

**கோயிலுக்குள் :**

9. ஈரவேஷ்டியுடன் செல்லக்கூடாது.

10. ஒற்றைத்துணியுடன் செல்லக்கூடாது.

11. கறுப்புத்துணி அணிந்து செல்லக் கூடாது.

12. ஊர் வம்பு பேசக்கூடாது.

13. தெய்வ நிந்தனை செய்யக்கூடாது.

14. தற்புகழ்ச்சி செய்துகொள்ளக் கூடாது.

15. பகவான் பக்கம் கால் நீட்டக்கூடாது.

16. பகவானுக்குப் பின்புறத்தைக் காட்டிக்கொண்டு உட்காரக் கூடாது.

17. நிவேதனமாகாதவைகளைப் புசிக்கக் கூடாது.

18. பூஜைக்குத் தகாத புஷ்பங்களைத் தருதல் கூடாது.

19. சிரார்த்த தினத்தில் செல்லக் கூடாது.

20. பிரேதம் சுமந்த அன்று செல்லக் கூடாது.

21. பகவத், பாகவத ப்ரார்த்தனை தவிர வேறு எதிலும் மனம் செல்லக் கூடாது.

## பகவான் திருவடிகளில் செய்யத்தகாத குற்றங்கள்

[சேஷ கருடபுராணத்தில், அறுபத்து நான்காம் அத்தியாயத்தில், பகவதனுக்ரஹத்துக்குப் பாத்திரமாக விரும்புபவர்களால் தவிர்க்கப்பட வேண்டியவை என்று ஸர்வலோக பிதாமகனான ப்ரம்மாவால் ஸ்ரீ நாரதபகவானுக்கு (சதாபராத ஸ்தோத்ரம் மூலம்) எடுத்து விளக்கப்பட்ட நூறு குற்றங்களிலிருந்து சிலவற்றை கீழே கொடுத்துள்ளோம். அவைகளையாவது பக்தர்கள் தவிர்த்து ச்ரியப்பதியான பகவானுடைய பரமக்ருபைக்குப் பாத்திரர்களாவார்களாக.]

1. கால்களை அலம்பாமல் கோயிலில் பிரவேசித்தல்.

2. இறைவனுக்கு நேர் எதிராகச் செல்லுதல்.

3. மணியில்லாமல் பூஜை செய்தல்.

4. வாயினால் ஊதிய நெருப்பைப் பூஜையில் உபயோகித்தல்.

5. தூபம் தீபம் – ஸமர்ப்பிக்கும்போது ஸ்தோத்ரமொன்றும் சொல்லாதிருத்தல்.

6. பூஜைக்கான தீர்த்தத்தில் நகம் படுதல்.

7. முழங்காலையும் அதன் கீழ்ப்பகுதியையும் தாங்கிக்கொண்டு பூஜை செய்தல்.

8. அறுபட்டவை, வெட்டுண்டவை, அதிக சிவப்பானவை இப்படிப்பட்ட மலர்களை ஸமர்ப்பித்தல்.

9. மணமில்லாத மலர்களால் பூஜித்தல்.

10. துளஸியில்லாமல் பூஜை செய்தல்.

11. மலர்களை அலம்பாமலும் துளஸியை அலம்பியும் பூஜையில் உபயோகித்தல்.

12. கச்சம் இல்லாமல் அல்லது புச்சமான கச்சத்துடன் பூஜித்தல்.

13. ஆசாரிய நிந்தையைக் கேட்டல்.

14. நல்லோர்களின் நிந்தையைக் கேட்டல்.

15. நல்ல சாஸ்திரங்களின் நிந்தையைக் கேட்டல்.

16. திருவாராதனம் செய்யும் காலத்தில் குழந்தைகளுடன் குலாவுதல்.

17. திருவாராதன காலத்தில் குழந்தைகளைப் பற்றின சிந்தை.

18. சோம்பலுடன் திருவாராதனம் செய்தல்.

19. மௌனமாக திருவாராதனம் செய்தல்.

20. வயிற்றில் அஜீரணமான அன்னத்துடன் திருவாராதனம் செய்தல்.

21. திருவாராதன காலத்தில் ஸத்புருஷர்கள் வந்தால் புத்தி பூர்வமாக அவர்களை வரவேற்காதிருத்தல்.

22. ஹரிகதைகளைப் படுத்துக்கொண்டே கேட்பது.

23. புராணம் கேட்கும்போது வெற்றிலை முதலியன போடுதல்.

24. பெருமாளை ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தெழுந்தபின் உடம்பிலுள்ள தூசியை உதறுவது.

25. புருஷ ஸூக்தமில்லாத திருவாராதனம்.



ஸ்ரீ:
ஸ்ரீமதே நம:

## தஞ்சை மாமணிக்கோயில் (விண்ணாற்றங்கரை)

# ஸ்ரீ தேசிகன் திருமஞ்சனக் கட்டியம்

மதுராந்தகம், மகாவித்துவான்

## ஸ்ரீ உ. வே. டி. ஈ. வீரராகவாச்சாரியார் ஸ்வாமி

(ஸ்ரீரங்கம்)

[குறிப்பு: பல திவ்ய தேசங்களில், பெருமாள் ஸந்நிதிகளிலும், ஆசாரியன் ஸந்நிதிகளிலும் திருமஞ்சனம் (அபிஷேகம்) நடக்கும் பொழுது, திருமஞ்சனக் கட்டியம் என்ற மணிப்ரவாள நடையில் உள்ள வாழ்த்துரையை, கண் பனி சோர, உள்ளம் துவள, பரந்த கோஷ்டியின் முன்பே மகான்கள் அருட்பாட்டிடுவார்கள். உள்ளமெல்லாம் புருஷோத்தமனை ஸ்ரீ நீலமேகன்பால் ஒன்றி மண்டி இருக்க அமைதியான சூழ்நிலையில் அக்கட்டியத்தைத் திருச்செவி சாற்றி அனுபவிக்க பாக்கியம் செய்திருக்கவேணும். அந்நிலை திருநாட்டில் (வைகுந்தத்தில்) நித்ய சூரிகள் திரளிலே பாடப்படும் ஸாமகானத்தை நினைவுபடுத்தும். ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் கோயில் கொண்ட சிறந்த தலங்களான (காஞ்சீபுரம், திருவேந்திபுரம், திருவரங்கம்) மூன்று தலங்கள் போல இந்தத் தஞ்சை மாமணிக்கோயிலும் ஸ்ரீதேசிகன் புகழ் பெற்ற தலமாகும். இங்கு எழுந்தருளி இருக்கும் ஸ்ரீ தேசிகன் ஸந்நிதியிலேயும் இந்த அருமையான கட்டியத்தை அனுஸந்திப்பது மிகவும் சிறந்ததே.]

1. திவ்ய ப்ரபந்த க்ருதபிஷ்டவ பத்யகாதா:
 வேதாந்த தேசிகக்ருதா அபி தேப்ரபந்தா: |
 யத்ஸந்நிதௌ ப்ரதம ஸம்படிதா மஹத்பி:
 தஞ்ஜேச்வரோஸ்திஸமுதேமம நீலமேக: ||

2. ஸுஜாத சரணம்புஜம் ஸுத்ருட குல்பஜாநூருகம்,
 ஸிதாந்தரகடீதடம் ஸுபகநாபி வக்ஷோஸ்தலம் |
 ஸுதீர்க புஜக பாஹுகம் சுபகபோல நாஸாக்ஷிகம்
 மனோ ருசிரமாலிகம் கலய வெங்கடேசம்குரும் ||

3. கலயே ஸததம் கருணா ஜலதிம்
 கருணா விஷயம் கமலாதிபதே: |
 கலிவைரி சடாரி வசோரஸிகம்
 கவிதார்க்கிக கேஸரி ஸூரி குரும் ||

4. சுபநயன கபோலம் சுப்ரயக்ஞோபவீதம்
 கமல ஸத்ருச பாணிம் காந்த பாஹ்வந்தராளம் |
 உசிதபத நிவிஷ்டாந் ஊர்த்வபுண்ட்ரான் ததாநம்
 ச்ருதிசிகர குரும்தம் ஸூரிவந்த்யம் பஜேஹம் ||

5. ஜயதி நிகமசூடா தேசிகேந்த்ரோ தயாளு:
ஜயதி ஸுமதி ஸேவ்யா சோபநா தஸ்யஸூக்தி : |
ஜயதி சுபகுணம் தம் சீலயன் ஸூரிஸங்க:
ஜயதி வஸுமதீயம் தஸ்ய ஸஞ்சார தந்யா ||

1. நாநா ஸித்தாந்த நீதி ச்ரம விமல தியோனந்த ஸூரேஸ்த நூஜ ?

2. ஸ்ரீமத் தோதா ரபிக்யா ச்ருதவர ஜநநீ கர்பவாராசி சந்த்ர !

3. ஸ்ரீ வேங்கடேச திவ்ய கண்டாவதார !

4. விச்வாதிசாயி விச்வாமித்ர கோத்ரபூஷண !

5. வரத குரு க்ருபாலம் பிதோத்தாமவைபவ !

6. காவலன் எங்கள் கிடாம்பிக் குலபதி அப்புளார்தம் சேவடி சேர்ந்து பணிந்து, அவர்தம் அருளால் நாவலரும் தென், வடமொழி நற்பொருள் பெற்ற நம்பி !

7. அருள் தரும் ஆரண தேசிகனே !

8. வரு கவி தார்க்கிக சிங்கமே !

9. வேண்பெரிய விரிதிரைநீர் வையுத்துள்ளே வேதாந்த வாரியன் என்று இயம்ப நின்றோய் !

10. ஸர்வதந்த்ர சுதந்தரனே !

11. வஞ்சப்பல சமயத்தை மாய்த்ததனுல் உண்டான மயக்கம் வோ !

12. பேச்சொன்றுக்குச்சததூஷணியைப் பேசிய நின் திருமேனி வாட்டம் தீரவோ !

13. பழமறையந்தி நடைக்கு இடைச்சுடர், புறமதங்களனைத்தும் இடிக்க நடந்தருளின நின்திருவடிகளின் விடாய் தீரவோ ?

14. திக்கெட்டும் புகழ் ஸ்ரீ பாடியத்தைப் பலமுறையும் கருணையினல் அடியவற்கருளியதால் உதித்தகளையாறவோ ?

15. திருமால்தன் திருப்பதிகள் பலகாலும் உகந்தருள நடையுற்ற திருவடியின் அழல் அனைத்தும் தீரவோ ?

16. தேவரீர் பலகோடி நூருயிரம் பல்லாண்டு வாழ்ந்து அருளி நின்று, தஞ்சை மாமணிக்கோயில் எம்பெருமானைத் " திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்கிறபடியே அனவரதம் கண்டு களித்துப் பல்லாண்டு பாடி அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி வாழ்ந் திடுக ! வாழ்ந்திடுகவே !!

17. நபஸ்ய மாஸி ச்ரோணயாம் அவதீர்ணய ஸூரயே !
வேதாந்தாசார்ய வர்யாய வேங்கடேசாய மங்களம் !!

அருளப்பாடு சங்கதாரை ! பத்மதாரை !! ஸஹஸ்ர தாரை !!!

# கோயில் நிர்வாஹிகளுக்கும் சிப்பந்திகட்கும்

# முக்கியமான விஞ்ஞாபனம்

ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் மங்களாசாஸனம் செய்துள்ள "நின்னருளாங் கதியன்றி" என்ற பாசுரம் இக்காலத்துக்கு மிகவும் பொருந்தும். அதாவது, இந்தக் கலியில் ஒவ்வொருவருக்கும் இருக்கும் கஷ்டங்களைப் பார்த்தால் அக்கஷ்டங்களைத் தீர்த்துக் காப்பாற்ற பகவான் ஒருவரைத் தவிர வேறு எவராலும் முடியாது. எனவே, கணக்கற்ற கஷ்டங்களில் அவதியுறும் மக்கள் 'பகவானே கதி" என்று கோயில்களை நாடி வருகின்றனர். இப்படி வேறு கதியின்றி, பகவான் ஸேவையே கதி யென்று வருபவர்களை அன்புடனும் ஸகல ஸௌகர்யங்களுடனும் ஸேவை செய்து வைப்பது கோயில் நிர்வாகிகட்கும் சிப்பந்திகட்கும் ஒரு பெரிய கடமையாகும். அதனால் அவர்கட்கு மட்டற்ற புண்ணியம் உண்டு என்பதைக் கூறவும் வேண்டுமோ?

முக்கியமாக அர்ச்சகர்களுக்கு ஒரு பிரத்தியேகமான கடமை உண்டு என்பதைத் தாழ்மையுடன் விஞ்ஞாபித்துக்கொள்கிறோம். ஏனெனில், அர்ச்சகர்கள் பகவானுடைய நேர்ப் பிரதிநிதிகள் என்பது நம் பெரியோர் கருத்து. "அர்ச்சகரை நிந்திப்பது ஆண்டவனை நிந்திப்பதற்கு ஒப்பாகும்," என்ற பெரியோர் வாக்கு இதற்குச்சான்று கூறும். எனவே, பகவானை ஸேவிக்க வரும் ஸேவார்த்திகளிடம் அர்ச்சகர்கள் பிரீதியாக நடந்துகொண்டு அவர்களுக்கு அக்கறையுடன் பகவானுடைய ஸேவை செய்து வைத்து அர்ச்சனை முதலியவைகளை நடத்திக் கொடுத்தால், துன்பத்தைப் போக்கிக் கொள்வதற்காக பகவத் ஸந்நிதானத்தை நாடிவரும் பக்தர்கள், பகவானே தமக்குப் பிரத்யக்ஷமாகி அநுக்ரஹம் புரிந்ததாக ஆனந்தமடைவார்கள்.

ஆகையால், பகவானுக்குக் கைங்கர்யம் செய்யும் மகத்தான பாக்கியத்தைப் பெற்ற பட்டாச்சாரியர்களுக்கு அடியோங்கள் செய்து கொள்ளும் எளிய விஞ்ஞாபனமாவது: கோவிலுக்குவரும் ஸேவார்த்திகளுடைய கஷ்டங்கள் என்னென்ன என்பதைக் குறிப்பாக உணர்ந்து. அதற்குத் தகுந்தபடி ஸங்கல்பம் செய்துகொண்டு அவர்களுக்காகப் பிரார்த்தித்து அங்ஙனம் அவர்களுக்காகச் சிபாரிசு செய்து பகவானிடம் விஞ்ஞாபனம் செய்துகொண்டிருப்பதை அவர்களுக்குத் தெரிவித்து அவர்களுக்கு, பகவானுடைய அருள் நிச்சயமாக ஏற்படும் என்ற உறுதியும் கூறி அனுப்பினால் மனநிம்மதியை இழந்து பகவத் ஸன்னிதானத்திற்கு வரும் பக்தர்களுக்கு மனச்சாந்தி ஏற்பட வழி செய்த மகத்தான புண்ணியம் அவர்களுக்கு (அர்ச்சகர்களுக்கு)க் கிட்டும் என்பது திண்ணம். **அவர்கள் செய்யும் ஸம்பாவனையைப் பொருட்படுத்துவது கூடாது.**

இந்தத் திருவஹீந்திரபுர க்ஷேத்திரத்தைப் பொறுத்தவரை, சிறந்த பக்திமானும், தொண்டு செய்யும் மனப்பான்மை உடையவருமான ஸ்ரீமான் T. P. சிங்காரவேலுப் பிள்ளை அவர்கள் தேவஸ்தான நிர்வாக அதிகாரியாக (Executive Officer) சமீபத்தில் பதவியேற்று இருப்பதாகவும், 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்பதையே தமது குறிக்கோளாகக் கொண்டு, கோயில் நிர்வாகத்தில் மிகுந்த பக்தியுடனும், சிரத்தையுடனும் ஈடுபட்டு வருவதுடன் கோயிலுக்கு வரும் ஸேவார்த்திகளுக்குத் தம்மால் இயன்ற அளவு ஸௌகர்யங்களைச் செய்து தருவதில் மிகுந்த ஆர்வம் காட்டுவதாகவும், ஸமீபத்தில் இந்த க்ஷேத்திரத்துக்கு பகவானை வந்துச் சேவித்துத் திரும்பிய பக்தர்கள் மூலம் அறிந்து பெரிதும் மகிழ்கிறோம். அவருடைய நிர்வாகத் திறமையினாலும், சிரத்தையினாலும் பக்தர்களுக்குப் பல நன்மைகளும் வசதிகளும் ஏற்படவேண்டும் என்றும், அவருக்கும் அவரைச் சேர்ந்தவர்களுக்கும் ஸகல ஸௌபாக்யங்களும், ஸர்வ மங்களமும் ஏற்பட வேண்டும் என்றும் மனப்பூர்வமாகப் பிரார்த்தித்து ஸ்ரீ அயிந்தை நாதனின் அடி மலர்க்கமலங்களைப் பணிகின்றோம்.

குரோதி ஹு
புரட்டாசி மீ
திருவோணத் திருநாள்,
15—10—1964.

தி லிட்டில் ப்ளவர் கம்பெனி,
பதிப்பகத்தார்.



# இவ்வருஷம் திருவஹீந்திரபுரத்தில் நிறைவேற்றப்பட்ட புதிய கைங்கர்யம்

மாதவன் தாளை மறவாத மாபெரும்பக்தரான சென்னை அமைந்தகரை ஸ்ரீமான் K. ஆதிநாராயண ரெட்டியார் அவர்களுடைய நன் முயற்சியால் திருவஹீந்திரபுரத்தில் அடியவர்க்கு மெய்யனை ஸ்ரீதேவ நாதனுக்கும் லோகாசார்யனை ஸ்ரீமான் நிகமாந்த மஹா தேசிகனுக்கும் மஹோத்ஸவம் கண்டருளப் பண்ணுவதற்காக (பகவதாராதனத்துக்குரிய முக்கிய உபகரணங்களில் ஒன்ருகிய கண்ணடியால்) ஒரு புதிய கண்ணடி அறை ஸமீபத்தில் நிர்மாணிக்கப் பட்டுள்ளது என்ற நற்செய்தி ஆஸ்திகப் பெருமக்களுக்குப் பேரானந்தத்தை அளிக்கும்.

இந்த அறையில் இந்த ஸம்வத்ஸரம் ஸ்ரீமத் வேத மார்க்கேத்யாதி ஸ்ரீமத் (ஆண்டவன்) வேதாந்த ராமானுஜ மஹாதேசிகனும் மங்களாசாஸனம் செய்வார்கள் ஏன்பது மற்ருெரு மகிழ்ச்சிகரமான செய்தியாகும்.

இந்த மஹத்தான கைங்கர்யத்துக்குக் காரணபூதரான பரம பாகவதர் ஸ்ரீமான் K. ஆதிநாராயண ரெட்டியார் அவர்களுக்கும் அவருடைய குடும்பத்தினருக்கும் ஸகல ஸௌபாக்யங்களும் ஏற்பட க்ருபைபுரிய வேணுமாய் ஆசார்ய ஸார்வ பௌமனை ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் திருவடிகளிலும், ஸ்ரீ ஹேமாப்ஜ நாயிகா ஸமேத ஸ்ரீ தேவநாதன் திருவடிகளிலும் பிரார்த்திக்கிரேம்.

குரோதி ஹூ
புரட்டாசிமீ
திருவோணத் திருநாள்,
15—10—1964.

தி லிட்டில் ப்ளவர் கம்பெனி,
பதிப்பகத்தார்.



ஸ்ரீராமஜெயம்

# லிப்கோவின்

# பக்தி சம்பந்தமான

# வெளியீடுகள்



1964

பதிப்பகத்தார் :





## தி லிட்டில் ப்ளவர் கம்பெனி

[ஸ்தாபிதம் : 1929; டெலிபோன் : 41538]

8, ரங்கநாதன் தெரு,

தி. நகர் சென்னை-17.


லிப்கோ புத்தகங்கள் ஹிக்கின்பாதம்ஸ் ('போன் : 86556), மௌண்ட் ரோடு, சென்னை-2; பெங்களூர், உதகை; ஹிக்கின்பாதம்ஸ், சுதேசமித்திரன் ரெயில்வே ஸ்டால்களிலும், மற்றும் எல்லாப் பிரபல புத்தகக் கடைகளிலும் கிடைக்கும்.


(கடைசி பக்கம் பார்க்க)

அடுத்த பக்கம் பார்க்க

முன் பக்கத் தொடர்ச்சி]

## ஸ்ரீமத் ராமாயண வெளியீடு விவரம்

1. பால காண்டம்
2. அயோத்யா காண்டம்
3. ஆரண்ய காண்டம்
4. கிஷ்கிந்தா காண்டம்
5. ஸுந்தர காண்டம்
6. யுத்த காண்டம்
7. உத்தர காண்டம்
8. ஸ்ரீமத் வால்மீகி ராமாயண தத்வார்த்த தீபிகை (ராமாயண நோட்டுகள்)
9. இக்ஷ்வாகு குலதனம் என்னும் ஸ்ரீரங்க மாஹாத்மியம்
10. ஸ்ரீராம ஸ்தோத்ரமாலா
11. ஸ்ரீமத் ராமாயண பாராயண வகைகளும் முறைகளும் ஸ்ரீராம பூஜா மந்த்ராநுஷ்டான க்ரமும்
12. ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம்
13. குமரனும் கோசலை குமரனும் என்னும் திருப்புகழில் ராமாயணம்
14. **Select Shrines of Sri Rama (Art Plates)**

**மேற்கண்ட 14 புஸ்தகங்களை வாங்குபவர்களுக்குமட்டும் இலவசமாக அளிக்கப் படுபவை (கைவசம் உள்ளவரை):**

15. ஸம்ஸ்க்ருத ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்
16. ஸ்ரீராமர் அலுமினியப் படம்
17. ஸரஸ்வதி பீடம் (சிக்குப் பலகை)
18. அக்ஷதை பரணி
19. திலகப் பை
20. மேற்கண்டவைகளைத் தாங்கும் மரப் பெட்டி



**வீடுதோறும் ஒளிரவேண்டிய பக்திச் சுவை பரிமளிக்கும் பதிப்பு**

*கீர்த்தனாசார்ய*

ஸ்ரீ உ. வே. C.R. ஸ்ரீநிவாஸய்யங்கார், B.A. *அவர்களின்*

# ஸுந்தர காண்டம்

(ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத் தமிழ் மொழிபெயர்ப்பு)




★ *பாராயண முறைகள்.*
★ *பல திவ்ய க்ஷேத்ர ஸ்ரீராமபிரானின் படங்கள்.*
★ *பல்வேறு இன்றியமையாத ஆன்மிக விஷயங்களும் சுலோகங்களும்.*

**இலவசம்**

*இப்பதிப்பின் ஒவ்வொரு பிரதியுடனும் கோரக்பூர் கீதா பிரஸ் வெளியிட்டுள்ள ஸம்ஸ்க்ருத ஸுந்தர காண்டம் — மூலம் (பிரதிகள் கிடைக்கும்வரை) ஒரு பிரதி இலவசமாகத் தரப்படுகிறது.*

'கல்கி' ஸைஸில் 520 பக்கங்கள்
— முழு காலிகோ பைண்டிங்
நான்கு வண்ண அழகிய மேலட்டை
— கவர்ச்சிகரமான வெளியீடு

**விலை ரூ. 12.50; தபால் மூலம் ரூ. 14.50** *(முன் பணம் தேவை)*

---

**AN IDEAL BOOK FOR PARAYANAM**

## SRIMAD RAMAYANAM &
# ALL ROUND SUCCESS
(*with Prayers of Ramayana Deities*)

Among the hundreds of the Sargas of the Ramayana, some have been singled out as of great efficacy for certain types of worries. In this book are set out the various chief worries that may beset a man and the Chapters or Sargas of the Ramayana (in Devanagiri) are set out.

***Attractively got up with many illustrations: 572 Pages***

**Price Rs. 9·00; By Post Rs. 10·60**

***Issued free with the above book:***

1 Stotra Ratnavali; *and*

2 The Grandeur of Lord Sri Lakshmi Hayavadana Perumal and Some Sacred Places Devoted to Lord Sri Rama.

---

**பதிப்பகத்தார்: தி லிட்டில் ப்ளவர் கம்பெனி (லிப்கோ), சென்னை-17.**

# ஆஸ்திகர்களுக்குத் தேவையான லிப்கோ புத்தகங்கள்



ஸ்ரீரங்க மாஹாத்மியம் — 440 பக்கங்கள் ... ரூ. 2·50
திருநீர்மலை ஸ்தல புராணம் ... 30 பை.
திருவயிந்திரபுர ஸ்தல புராணம் ... ரூ. 1·30
LIFCO CONVERSATIONAL SAMSKRIT ... 25 P.
குமாரஸம்பவம் — மூலமும் தமிழ் உரையும்— 5-ம் ஸர்க்கம் ... 62 பை.
ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம் ... 25 பை.
ஸ்ரீ கனகதாரா ஸ்தோத்ரமும் லக்ஷ்மி அஷ்டோத்ர சதநாம ஸ்தோத்ரமும் — ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் ... 25 பை.
திருப்பாவை, திருவெம்பாவை ... 13 பை.
சித்திரத் திருப்பாவை ... 60 பை.
ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகனும் ஸ்ரீலக்ஷ்மீஹயக்ரீவப் பெருமாளும் ... 50 பை.
புரட்டாசித் திருவோணத் திருநாளும் சில ஸத்விஷயங்களும் ... 70 பை.
ஆழ்வார்களும் ஸ்ரீதேசிகனும் ஸர்வார்த்த ஸித்தியும் ... 80 பை.
ஸ்ரீவைஷ்ணவ அமாவாஸ்யை தர்ப்பணம் 40 பை.
ஸ்ரீ மஹா பக்த விஜயம் ... ரூ. 2·25
குமரனும் கோசலை குமரனும் (திருப்புகழில் ராமாயணம்) ... 90 பை.
SELECT SHRINES OF SRI RAMA ... Rs. 2·00
ஆதித்யஹ்ருதயமும் ஸ்ரீராமாஷ்டோத்தர சதநாம ஸ்தோத்ரமும் (ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும்) ... 25 பை.

---


Printed by Jaya & Co., (Paramount Press), Madras-5.